கடவுள் துணை

# தற்கால

# வயித்தியபோதினி

இஃது

வித்துவான் நா. அப்பன்செட்டியார் அவர்கள்

மாணாக்கர்,

ம-ா-ா-ஸ்ரீ,

மா. வடிவேலுமுதலியாரால்

எழுதப்பட்டு,

சென்னை நூலை,

எஸ். பி. இராஜாராமவர்களால்

தமது

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

REGISTERED COPYRIGHT

உ

கடவுள் துணை.

# ரிஜிஸ்ட்டர் அறிவிப்பு.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில், 1867-வது வருஷத்திய 25-வது ஆக்ட்டின் 20-வது பிரிவின் 6-வது விதியின்பிரகாரம் இந்நூலை இங்கிலீஷ் இலாகாவாகிய மதராஸிலும், பிரஞ்சு இலாகாவாகிய புதுச்சேரியிலும், காரைக்காலிலும், காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்நூலுக்குடையவராகிய எஸ். பி. இராஜாராம் அண்டு கம்பெனியாரவர்களின் உத்திரவின்றி இதை வேறுபாஷையில் மொழி பெயர்த்தாவது அல்லது இதில் கண்டிருக்கிற பாகங்களையாவது ஒருவரும் அச்சிடலாகாது. அப்படி அச்சிட்டால் அதனால் உண்டாகும் நஷ்டத்தை வசூல் செய்யப்படும்.

## முக்கியகவனிப்பு.

இப்புத்தகமாவது இன்னும் இதரமான புத்தகங்களாவது அவிழ்தங்களாவது தேவையானவர்கள் அடியில் கண்டிருக்கும் கம்பெனியாரவர்களுக்கெழுதி பெற்றுக்கொள்ளலாம் கேட்டாக்தேவையானவர்களுக்கு இனாமாய் அனுப்பப்படும்.

எஸ். பி. ராஜாராம் அண்டு கம்பெனி,

நெ. 14, ஆரிமுத்துமேஸ்திரி தெருவு,

சூளை போஸ்ட்டு, மதராஸ்.

நூதனமாய் அச்சிட்டிருக்கும் புத்தக விளம்பரம்

# பிருஹஜ்ஜாதகமென்னும்

# மங்களேஸ்வரீயம்.

ஆதியில் இந்தப் "பிருஹஜ்ஜாதக"மானது சோதிடபரமாசாரியர்களில் ஒருவராய் விளங்கியிருந்த வராஹமிகிராசாரியர் என்பவரால் வடமொழியில் சுலோகரூபமாகத் திருவாய்மலர்ந்தருளியது.

இதற்கு ஆந்திரபாஷையில் வசனரூபமாக சோதிடசிரோன்மணி திருவேங்கிடாசாரியார் என்பவர் ஓர் உரையியற்றியுள்ளார்.

இவ்விரண்டையுந்தழுவி, திருமலைராயன்பட்டணம் சோதிடர் வயித்தியலிங்க பண்டிதரவர்களால் நந்தமிழ் நாட்டுச்சோதிடர்களுக்குதவுமாறு பரோபகாரமாய்த் தமிழில் பாட்டும் உரையுமாக மொழிபெயர்த்துள்ளார்.

இதனுடைய அருமையைக் கண்ணுற்ற ஜோதிடர்களும் வித்துவான்களும், சாத்துகவிகள் கொடுத்திருப்பதுந் தவிர, வேண்டிய புத்தகங்களுக்கும் முன்பணமுங்கொடுத்து அவரவர்களுக்கு வேண்டிய வரையில் நூற்றுக்கணக்கான புத்தகங்களும் பெற்றுக்கொண்டார்கள்.

இது சில அற்பசோதிடர்கள் பாடும் சோதிட புத்தகங்களைப் போன்றதென்று ஐயமடையவேண்டாம்.

இஃது மகா சோதிட சாஸ்திரங்களிலொன்று. மேலும் ஓராசாரம பாராசரியம் முதலிய சோதிடசாஸ்திரங்களுக்கு மேலாயானது.

கற்றவரும் கல்லாதவருமான எல்லாச்சோதிடர்களும் கையாளத் தகுந்தது.

(இச்சாஸ்திரம்) முற்காலத்ததாயும், மகா சிரேஷ்டமானதாயுமிருப்பதால், இதைப்பற்றி இவ்விடத்தில் விசேஷமாய்ப் பேசவேண்டியதில்லை. இதனுண்மை பரம்பரையான சோதிடர்களுக்கு நன்றாய்த் தெரியவருமென்பது சத்தியம்.

இந்நூலுக்கு மகாமகோ உபாத்தியாயப் பட்டம் பெற்றவர்களும் உயர்தர கலவிமான்களும் கொடுத்திருக்கும் நற்சாக்ஷிபத்திரமும் இக்கிரந்தகர்த்தாவாகிய தி. இ. வயித்தியலிங்க ஜோதிடருடைய திருவுருவப் படமும், இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

உயர்ந்த பயிண்டு புத்தகம் 1-க்கு ரூபா-1-4-0. வி பி-சார்ஜ் அணா-4.

கடவுள் துணை.

# முகவுரை.

இவ்வுலகத்தின்கண் இதுவரைக்கும் அநேகவயித்திய நூல்கள் அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்றன. ஆனால், அவைகளில் அநேக வயித்தியபாகங்கள் கிடைக்கப்படுகின்றன. அப்படி கிடைக்கப்படுபவற்றுள், சிலபாகங்களை அநுபவத்திற்கு வருகின்றன. மற்றவைகள் பிரயோசனத்திற்கு வசப்படாமற்போகின்றன. அப்படி போவதைப் பார்க்குமிடத்தில், முன்காலத்திலிருந்த தேகவலிமைநோக்கிச் சொல்லிய பாகங்கள் இக்காலத்தார் தேகத்திற்குப் பிரயோசனப்படாமலும், இந்தக்காலத்துத் தேகத்தைநோக்கிச்சொல்லியபாகங்கள் பிரயோசனப்பட்டும் வருகின்றனவாகத் தெரியவருகின்றது. இப்படியிருப்பதால், இந்தக்காலத்துத் தேகவலிமைநோக்கியும், பின்காலத்தார் தேகவலிமைநோக்கியும், இப்பொழுது அநேகவயித்தியர்களால் கையாளப்பட்டு வருகின்ற பாகங்களைமாத்திரமே 15-அத்தியாயங்கப்பிரித்துத் (தற்காலவயித்தியபோதினி) என்கிற பேரிட்டு எழுதி ஒருநூல் அச்சிட்டிருக்கின்றனன். ஆனால் இந்நூலில் சொல்லியபடியே விபரீதமான அர்த்தஞ்செய்துகொள்ளாமல் சரியானபடி செய்து பார்த்தால் அவ்வம்மருந்துகளுக்குச்சொல்லியுள்ள வேலைகளைக் கட்டாயம் செய்தேதீரும். இதற்குச சந்தேகமேயில்லை.

உயர்ந்தபதிப்பு கிளேஸ்கடிதம் உயர்ந்தபயிண்டு

இதின் விலை அணா-3.     வி-பி-சார்ஜ் அணா-3

உ

தெய்வமே துணை.

# தற்கால வயித்தியபோதினி.

## முதல் அத்தியாயம்.

### நாடி இலக்கணம்.

விநாயகர் வணக்கம்.

அந்திநிறத்தனை யாரணமெய்யனை
இந்திளம்பிறை போலுமெயிற்றனை
நந்திமகன்றனை ஞானக்கொழுந்தனை
புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே.

1. மூன்றுநாடிகளின் இருப்பிடம்.

ஆயுர்வேத பண்டிதனானவன் நோயாளியின் வலது கையைத் தன்னுடைய இடது கையாற்பிடித்து முடக்கு நெட்டை முதலியவைகளை விலக்கி விலக்கின அதிர்ச்சி நீங்குகிறவரைக்கும் சற்றுஉட்காரச்செய்து பிறகு அவனுடைய கையின்பெருவிரல் கடைசி பூட்டுக்கு ஒரு அங்குலந்தள்ளி ஒவ்வொரு விரலுக்கும் மத்தியில் நெல்லளவு துவாரமிருக்கும்படி தன்னுடைய மூன்றுவிரல்களை வைத்து அழுத்திப்பார்க்கும் போது முதலிலிருக்கும் ஆள்காட்டி விரலிற்படுவது வாதநாடியாகும். நடுவிரலிற் படுவது பித்தநாடியாகும். மோதிரவிரலிற் படுவது சேஷ்மநாடியாகும். பெண்களுக்கும் இவ்விதமே இடது கையிற் பார்க்கவேண்டும்.

2. வாதநாடியின் சுபாவநடை.

வாதநாடியானது. அசைந்துநடக்கும் அன்னத்தைப்போலவும் குதித்து நடக்கும் சேவலைப்போலவும், ஆடிநடக்கும் மயிலைப்போலவும் நடக்கும்.

3. பித்தநாடியின் சுபாவநடை.

பித்தநாடியானது உள்ளைசைவாய் நடக்கும் ஆமையைப்போலவும், துடிதுடித்து நடக்கும் அட்டையைப் போலவும் நடக்கும்.

4. சேஷ்மநாடியின் சுபாவநடை.

சேஷ்மநாடியானது குதித்து நடக்கும் தவளையைப்போலவும், வளைந்து நடக்கும் சர்ப்பத்தைப்போலவும் நடக்கும்.

5. சந்நிநாடி.

சந்நிநாடியானது முன்சொன்ன மூன்றுநாடிகளும் தங்களுடைய சுபாவநடையில் நடக்காமல் மிகவும் வேகமாய்நடப்பது.

6. உருசியால் முப்பிணிகளையறியும்
விதமும் அவைகளின் ரூபமும்.

எந்தப் பிணியாளனுக்காவது நாக்கு இனித்தால் சேஷ்மரோகமாம். நாக்குகைத்தால் பித்தரோகமாம நாக்குபுளித்தால் வாதரோகமாம். சேஷ்மம்-தண்ணீர் பித்தம்-நெருப்பு. வாதம்-காற்று.

7. மூன்றுநாடிகளின் நடை அளவு.

வாதம் ஒரு மாத்திரை. பித்தம் அரைமாத்திரை சேஷ்மம் கால்மாத்திரை.

8. மாத்திரையின் அளவு.

ஒருமாத்திரை என்பது கை நொடிப்பொழுதையாகிலும், கண்ணிமைப்பொழுதையாகிலும் கொள்ளலாம்.

9. வாதத்தில் வாதஞ்சேர்ந்த குணம்.

ஒருமாத்திரையா நடக்கும் வாதநாடியோடு வேறொருமாத்திரை வாதஞ்சேர்ந்தால் அந்த நோயாளியின் தேகம்நோந்து உலரும், நடுக்கலுண்டாம், அல்லாமல் அக்கினியும் மந்தப்படும.

10. வாதத்தில் பித்தஞ்சேர்ந்தகுணம்.

ஒருமாத்திரையா நடக்கும் வாதத்தோடு வேறொருமாத்திரை பித்தம்கலக்குமானால் அந்தநோயாளியின்வாய் குழறும, உடல்குளிரும், கால்வீங்கும், புத்தி மந்தப்படும், வயிறு உப்பும், அல்லாமல் குடலையும் புரட்டும்.

11. வாதத்தில் சேஷ்மஞ்சேர்ந்தகுணம்.

ஒருமாத்திரையா நடக்கும் வாதத்தோடு வேறொருமாத்திரை சேஷ்மம் சேர்ந்தால் அந்த நோயாளியின் சரீரமெல்லாம் மூள்தைப்பதுபோல் குத்தலுண்டாம், தேகம்வீங்கும், தலையில் இடிப்புண்டா

கும் புத்தி மாறாட்டமாகும், தேகம்வெளுக்கும், அன்னத்துவேஷமுண்டாகும், நாக்குக்குழறும், அல்லாமல் விக்கலுமுண்டாகும்.

12. பித்தத்தில் பித்தஞ்சேர்ந்தகுணம்.

ஒருமாத்திரையாநடக்கும் பித்தத்தோடு வேறொருமாத்திரை பித்தஞ்சேர்ந்தால், அந்தநோயாளியின் நாக்கு குழறும், தலைசுழற்றும், வாந்தியாகும், இளைப்புண்டாம், தேகம்வாடும், அன்றி, வெளுக்கும், அல்லாமல்முன்னேதேகம்வற்றிப்பின்னே வீக்கமுமுண்டாம்.

13. பித்தத்தில் வாதஞ்சேர்ந்தகுணம்.

ஒருமாத்திரையாநடக்கும் பித்தத்தோடு வேறொருமாத்திரை வாதஞ்சேர்ந்தால், அந்தநோயாளியின்கழுத்து, கை கால்முதலியவைகளில் குத்தலுண்டாகும், சரீரம நடுக்கும், சரீரம்வாடும், சுரமுண்டாம், புத்தி மந்தப்படும, அல்லாமல் கோபமும் அதிகமாய் உண்டாகும்.

14. பித்தத்தில் சேஷ்மஞ்சேர்ந்தகுணம்.

ஒருமாத்திரையாநடக்கும் பித்தத்தோடு வேறொருமாத்திரை சேஷ்மஞ்சேர்ந்தால், அந்தநோயாளியின் நாக்குகுழறும், வாந்தியும், கோழைநீரும் சுவாதீனந்தெரியாமல் ஓடும், வயிற்றில் ஒருவகையான நோயுண்டாகும, அல்லாமல் பித்தமானது சிரசிற்கேறிக் கழுத்துமுதல் தலைவரைக்கும் நோயுமுண்டாகும்.

15. சேஷ்மத்தில் வாதஞ்சேர்ந்த குணம்.

ஒருமாத்திரையாநடக்கும் சேஷ்மத்தோடு வேறொருமாத்திரை வாதஞ்சேர்ந்தால். அந்தநோயாளியின் சரீரத்திலுள்ளநரம்பெல்லாம் ஓரேஇழுப்பாய் இழுத்துக்கொண்டுவலிக்கும கழுத்தில் மிகுந்தநோயுண்டாம், கண்செருகும, அல்லாமல் நாக்கும், வாயும், குழறும்.

16. சேஷ்மத்தில் பித்தஞ்சேர்ந்த குணம்.

ஒருமாத்திரையாநடக்கும் சேஷ்மத்தோடு வேறொருமாத்திரை பித்தஞ்சேர்ந்தால் அந்தநோயாளியின் நாக்குக்கைப்பதுடன் பலபலருசியாகவுங்காட்டும், பேச்சுத்திடமில்லாமல் சோர்வடையும் நெஞ்சிற்கோழையுமுண்டாம், கண்களிற் பீளையுண்டாம், அல்லாமல் சுரலும் வேறுபடும.

### 17. சேஷ்மத்திற் சேஷ்மம் சேர்ந்தகுணம்.

ஒருமாத்திரையாநடக்கும் சேஷ்மத்தோடு வேறொரு மாத்திரை சேஷ்மமசேர்ந்தால, ஓ வயித்தியர்களே இதை நன்றாயறிதல் வேண்டும். அந்தநோயாளியின் ஆத்துமா வசித்திருந்தகூடுவிழுந்துபோம, (தேகம் இறந்துபோம, ஆத்துமா வெளிப்பட்டுப்போம்) அப்பொழுது அவன்கண்கள் செருகிவிட்டமிடும். இதற்குயாத்திரை நாடியென்று பேர்சொல்லுவர் பெரியோர்

### 18. மூன்றுநாடிகள் நடக்குங்காலமும் காலந்தவறின் வருந்தீமையம்.

காலையில் 6-மணியிலிருந்து 10-மணிவரைக்கும் சேஷ்மநாடியும், 10-மணியிலிருந்து 2-மணிவரைக்கும் பித்தநாடியும், 2-மணியிலிருந்து 6-மணி வரைக்கும வாதநாடியும் நடக்கும். இப்படியே இரவிலும் நடக்கும் இப்படி நடவாமல் நேர்தலைகீழாக நடந்தால் அந்த நோயாளி 5-நாள்களில் மரணமாவான்.

### 19. மூன்று நாடிகளாலும் பத்துமாதமரணமறிதல்.

எந்தநோயாளிக்காவது மேலேசொன்ன மூன்றுநாடிகளும், செம்போத்து என்று சொல்லுகின்ற கள்ளிக்காக்கை தன்னுடைய சிறகை யடித்துக்கொளவதுபோல் மேலெழும்பித் துடிக்குமானல் அந்தநோயாளியின் நோய் ஒருமாதத்தில் நீஙகவேண்டும. அப்படி நீங்காமற் போனல் அவன் பத்துமாதத்தில் மரணமாவான்.

### 20. சேஷ்ம நாடியால் ஒருமாதத்தின் மரணமறிதல்.

எந்த நோயாளிக்காவது சேஷ்ம நாடியானது குதிரையின்திமிரைப்போல் திமிர்த்து நிற்குமானல், அந்தநோயாளி ஒருமாதத்தில் மரணமாவான்.

### 21. மாறுபடும் நாடியால் மகாவாதமறிதல்.

எந்த நோயாளிக்காவது முன்னேசொன்ன மூன்றுநாடிகளும் சூரியசந்திரர்கள்போல் பிறழ்ந்துபிறழ்ந்து காணப்பட்டு அடங்கினல் அந்தநோயாளி மேகவாயுவிற்சேர்ந்த மகாவாதரோகபீடிப்பையடைவான்.

22. மூன்றுநாடிகளின் நடையால் அன்றைய மரணமறிதல்.

எந்த நோயாளிக்காவது காலையில் சுபாவமாய் நடக்கவேண்டிய சேஷ்ம நாடியானது மிகவும் வேகத்தோடு நடந்து, மததியானத்தில் சுபாவமாய் நடக்கும் பித்தநாடி துடிதுடித்து நடந்து, மாலையில் நடக்கவேண்டிய வாத நாடி நடைகொடாமல் அடங்கி விட்டால் அவன் அன்றையதினமே மரணமாவான்.

23. சேஷ்ம நாடியால் 7-நாள் மரணமறிதல்.

எந்த நோயாளிக்காவது சேஷ்ம நாடியானது பயந்த மயிலைப் போலவும், அட்டையைப்போலவும் நடுநடுங்கித்துடித்தால் அந்த நோயாளி 7-நாட்களில் மரணமாவான்.

24. மூன்று நாடிகளாலும் மரணமாகாமையறிதல்.

எந்த நோயாளிக்காவது மூன்று நாடிகளும், தீபத்தின் முனையைப்போல் யாதொன்றிலும சம்பந்தப்படாமல் தனித்தனி நடக்குமானால் அந்த நோயாளிக்கு மரணம் சம்பவிக்காது. எமபுரத்தையடையமாட்டான்.

25. சரீரக்குறியால் மரணமறிதல்.

எந்த நோயாளிக்காவது கண்களும், பற்களும், நீலநிறத்தையடைந்து, வாயினால சுவாசம வெளிப்பட்டு, வயிற்றிற் சேஷ்மம் தங்குகின்றதோ அந்த நோயாளி எமபுரத்தையடைவான்.

26. இதுவுமது.

எந்த நோயாளிக்காவது இடுப்பிலும், தொடையிலும் மார்பிலும் மிகுந்த எரிச்சலோடு யாதோவொன்று ஓடுவதுபோற் காணப்பட்டுத் தேகம வீக்கங்கொண்டு, தண்ணீரில் விருப்பமுண்டாய், கண்கள் பஞ்சடைந்து நாடிகளில் ஒன்று மறைந்து காணப்பட்டால் அந்த நோயாளி மரணமாவான்.

27. இதுவுமது.

எந்த நோயாளிக்காவது எழுந்திருப்பதும், படுப்பதும், இளைப்போடு விழுவதும்; மேல மூச்சுவாங்குவதும், இரண்டு கண்களும் விழிப்பதும், வழியைப் பார்ப்பதும, கோழையானது வெளிவந்து தொண்டையை யடைப்பதுமாகிய இந்தக் குணங்களிருந்தால் அந்த நோயாளி எமலோகபிராப்தியை யடைவான்.

28. இதுவுமது.

எந்த நோயாளிக்காவது முகமானது ஊசியைப்போல் நீண்டு சரீரமுழுமைகது முள்ள நரம்புகளெல்லாம் வெளிப்பட்டுக் கண் பஞ்சடைந்து பார்வைதெரியாமல் மறைவுபட்டு நாக்கிற் சலமில்லாமல் வரண்டு பல பலவிதமாகப் பிதற்றுங் குணமுண்டானால் அந்த நோயாளியின்உயிர் எமதூதர்களுடைய சுவாதீனமாய்விடும்.

29. நாடிகளின் தொகைவகை விவரம்.

நாபிக்கமலத்திலிருக்கின்ற பிரணவம் என்கிற ஒரு எழுத்தைச் சுற்றிக்கொண்டிருக்கிற எழுபத்திரண்டாயிர நரம்புகளில் முக்கிய நரம்புகள் பத்து அந்தப் பத்திலும் முக்கியமானவை மூன்று அவையே வாதம், பித்தம், சிலேஷ்மம் என்பன.

30. உண்ணும் பொருள்களால் நாடியறிதல்.

எவனொருவன் குளிர்ச்சியைத் தரத்தக்க பொருள்களையாவது, நெய், பால், மாமிசம், உயர்ந்த கனிவர்க்கங்கள், இளநீர் இவைகளையாவது பொசித்தானால் அவனுக்கு வாதநாடியே கிளர்ச்சியாய் நிற்கும். எவனொருவன் கோழி மாமிசத்தைத் தின்றபோதைக்கும், கோபாக்கிரனயிருந்த போதைக்கும், ஸ்திரீபோகஞ்செய்திருந்த போதைக்கும், அவனுக்குப் பித்தநாடியே கிளர்ச்சியாய் நிற்கும்.

31. மாதங்களில் நாடிபார்க்கும் விதம்.

சித்திரை, வைகாசி மாதங்களில் சூரியோதயத்திலும், ஆனி, ஆடி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் மத்தியானத்திலும், மார்கழி தை, மாசிமாதங்களில் சூரியாஸ்தமனத்திலும், பங்குனி, ஆவணி, புரட்டாசி மாதங்களில் இராத்திரியிலும், நாடிபார்த்தால் அந்த நாடிகள் யாதொரு குற்றத்தையும் காட்டாமல் உண்மைநிலைமை வெளிப்படுத்தும்.

32. வயித்தியர்களுக்கு அறிவிப்பு.

ஆயுர்வேதபண்டிதர்களே, நீங்கள் முன்னோர்கள் சொல்லியிருக்கின்ற அஷ்டவித (எட்டுவகையான) பரீட்சைகளையும் மனத்தை வேறுவழியிற் செல்லவிடாமல் ஒரே நிலையில் நிறுத்திச் செவ்வனே பார்த்துக் கைநாடி உங்களுடைய பேர்களை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும்.

## முதல் அத்தியாயம்

### நாடி இலக்கணம்.

சம்பூர்ணம்.

கடவுள் துணை

# இரண்டாவது அத்தியாயம்.

## கஷாயவர்க்கம்.

### 1. வாதசுரகஷாயம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிறுதேக்கு | பலம் | ௰ | முருக்கம்வேர் | பலம் | ௰ |
| சுக்கு | | ௰ | கெச்சைக்காய் வேர் | | ௰ |
| திப்பிலி | | ௰ | கண்டங்கத்திரி வேர் | | ௰ |
| செவ்வியம் | | ௰ | பேராமுட்டி | | ௰ |
| கோஷ்டம் | | ௰ | சன்னராஷ்டகம் | | ௰ |
| தாளிலை | | ௰ | மாவிலிங்கம் வேர் | | ௰ |
| திப்பிலிக்கட்டை | | ௰ | சிறுகாஞ்சொரி | | ௰ |
| சித்திரமூலம் | | ௰ | துமமராஷ்டகம | | ௰ |
| சஙகமவேர் | | ௰ | சதகுப்பி | | ௰ |
| வெள்ளறுகு | | ௰ | விஷ்ணுகாந்தி | | ௰ |
| நிலவேம்பு | | ௰ | | | |

செய்முறை தீருநோய் பத்தியம்.

இவைகளை யெல்லாம் இடித்து 10-பங்காக்கி வேளைக்கு ஒரு பங்கு மண்பாண்டத்திலிட்டு உழக்குச்சலம் விட்டு நன்றாய் ஊறின பின் அடுப்பேற்றி அரையாழாககாகச் சுண்டக்காய்ச்சித்தேன்விட்டு சாப்பிட்டால் வாயுவை அநுசரித்து வருகின்ற சுரங்களும், இன்னும அதின் தொந்தத்தால் வருகின்ற குளிர், சுரம், மாறல்சுரம், சந்நி சுரம, தாகம், இவைகளும் (3) நாள்களில் நீங்கிக் குணப்படும் வேளை வேளைக்குப் புதிதாகக காசசிசசாப்பிட வேண்டும். பத்தியம் கடுகு நல்லெண்ணெய், அகத்திக் கீரை, கொள்ளுப்பருப்பு, முதலியவைக ளும், குளிர்ச்சியான பதார்த்தங்களும் சோககப்படா.

### 2. பித்தசுர கஷாயம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விலாமிச்சம் வேர் | பலம் | ௰ | கூரத்துநிலா விரை | பலம் | ௧ |
| சிறுகாஞ்சொரிவேர் | | ௰ | சீரகம் | | ௧ |
| வில்வ வேர் | | ௰ | கொத்துமல்லி | | ௧ |
| பாகிரி வேர் | | ௰ | தும்பை வேர் | | ௧ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | பலம் | வ | பேரிச்சங்காய் | பலம் | வ |
| செவ்வல்லிக்கொடி | | வ | யானைத்திப்பிலி | | வ |
| கோஷ்டம் | | வ | நெல்லி முள்ளி | | வ |
| நன்னாரி வேர் | | வ | சுக்கு | | வ |

செய்முறை தீருநோய் பத்தியம்.

இவைகளை யிடித்து 8 பங்காக்கி ஒருபங்கை மண்பாண்டத்தி லிட்டு உழக்குச்சலம்விட்டு அரையாழாக்காகச் சுண்டக்காய்ச்சி தேன்விட்டுச் சாப்பிட்டால், மேலேசொன்ன பித்தசுரம் (21-ம்,) அதைத் தொடர்ந்து வருகின்ற சூலையும், தண்ணீர்த்தாகம் முதலி யவைகள் நீங்கும் பத்தியம் கடுகு நல்லெண்ணெய் முதலியவை கூடா.

3 சேஷ்டசுரகஷாயம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | ½ | கடுக்காய் | பலம் | ½ |
| திப்பிலி | | ½ | ஆடாதொடையிலை | | ½ |
| இலவங்கம் | | ½ | கற்பூரவல்லியிலை | | ½ |
| தாராஇலை | | ½ | சிவதாட்சி | | ½ |
| அக்கராகாரம் | | ½ | கண்டங்கத்திரி | | ½ |
| கறுப்புமுள்ளித்தண்டு | | ½ | | | |

இவைகளை வகைக்கு ½ பலமாக இடித்து (10) பங்காக்கி ஒரு பங்கை ஒரு மண்பாண்டத்திலிட்டு உழக்குச் சலம்விட்டு அரை ஆழாக்காகச் சுண்டக்காய்ச்சித் தேன்விட்டுச் சாப்பிட்டுக்கொண்டு வந்தால் சேஷ்டசுரம் (11-ம்) அதினைத் தொடர்ந்தால் வருகின்ற இருமல், இறங்கிருப்பு, வலி, இவைகள் தீரும் பத்தியம் கடுகு நல்லெண்ணெய் முதலியவையும், புளி, புகை, தாம்பூலம் இவைகளையும் நீக்க வேண்டும்.

## இரண்டாவது அத்தியாயம்

### கஷாயவர்க்கம்

சம்பூரணம்.

---

தெய்வமே துணை.

# மூன்றாவது அத்தியாயம்.

## சூரணவர்க்கம்.



### 1. சூரண சுத்தி.

ஏந்தச் சூரணமாயிருந்தாலும சரக்குகளையெல்லாம் சூரணஞ்செய்து வடிகட்டிப் பசுவின பாலாறப்பிசைந்து ஒரு சட்டியில் பாதி பசுவின பாலும பாதிசலமும விட்டு அந்தச் சட்டிவாய்க்கு வஸ்திரங்கட்டி அதின்மேல முன்பிசைந்த சூரணத்தை வைத்து மேல் மூடிப் பிட்டவியலாக அவித்து எடுத்து வெயிலிலுலர்த்தி இடித்து வைத்துக்கொள்ளவும் இப்படி சுத்திசெய்யாத சூரணங்களெல்லாம ரோகத்தைச் சமனஞ்செய்யாதவைகளேயாகும ஆகையால் ஒவ்வொரு சூரணங்களையும இப்படி சுத்திசெய்து கொள்ளவேண்டும்.

### 2. அக்கினிமுக சூரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சித்திர. மூலம் | பலம | 1 | கோஷ்டம் | பலம் | 1 |
| சுக்கு | | 1 | சோற்றுப்பு | | 1 |
| திப்பிலி | | 1 | இந்துப்பு | | 1 |
| மிளகு | | 1 | பெருங்காயம் | | 1 |
| ஓமம | | 1 | வசம்பு சுட்டகரி | | 1 |
| கண்டுபாரங்கி | | 1 | கடுகுரோகிணி | | ½ |
| யானைத்திப்பிலி | | 1 | சீனிசர்க்கரை | | 1 |

செய்முறை.

மேற்படி சரக்குகளில் காயத்தையும, வசம்பையும் தள்ளி மற்றவைகளை இளவறுப்பாய் வறுத்து இடிக்குஞ சமயத்தில் அந்த இரண்டையுஞ் சேர்த்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து அதில் மேற்படி சர்க்கரையை கலந்து புதிய மண்பாண்டத்தில் வைத்துக் கொள்ளவும்.

சாப்பிடும் அளவும் அநுபானமும் தீரும்ரோகமும்.

இதில் மூன்றுவிரற்கடைகொண்ட பிரமாணம் எடுத்து வெந்நீரநுபானஞ்செய்து ஒருநாளைக்கு இரண்டுவேளையும் கால்மண்ட.

லம் வரைக்குஞ் சாப்பிட்டு 1-நாள்விட்டு மறுநாளைக்கு தயிலாப்யங் கனஞ்செய்தால், கிராணி, இரத்தசம்பந்தப்பட்டவாயு, மூலவாயு இவைகள் தீரும இச்சாபத்திம.

3. திராட்சாதி சூரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உலர்ந்த திராட்சைபழம் | பலம | 1 | இலவங்கம் | பலம் | 1 |
| பேரீச்சம்பழம் | | 1 | கொத்துமல்லி | | 1 |
| அதிமதுரம் | | 1 | மிளகு | | 1 |
| முட்காவேளை | | 1 | வெட்டிவேர் | | 1 |
| நெற்பொரி | | 1 | சிறுதிப்பிலி | | 1 |
| கோரைக்கிழங்கு | | 1 | இலவங்கப்பத்திரி | | 1 |
| ஏலரிசி | | 1 | சீனிசர்க்கரை | | 1 |

செய்முறை.

மேற்படி சரக்குகளை இளவறுப்பாய் வறுத்திடித்து வஸ்திர காயஞ்செய்து அதில மேற்படி சர்க்கரையைக்கலந்து புதிய மண்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் அளவும் அநுபானமும் தீரும்நோயும்.

இதில் மூன்று விரற்கடைகொண்ட பிரமாணம் எடுத்துத் தேனிற்குழைப்பி ஒருவேளைக்கிரண்டு வேளையும் கால்மண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டு ஒருநாள்விட்டு மறுநாளைக்குத் தயிலாப்யங்கனஞ் செய்தால், அந்திரமுஷ்டிவாயு, பாண்டு, தாபசுரம், மயக்கம், அதிதாக்கம், பித்தம், அரோசகம், அன்னத்துவேஷம இவைகளும், நெய்யிற் சாப்பிட்டு இப்படியே செய்தால், உஷ்ணம் சேஷ்மம், அக்கினிமந்தம், கை காலெரிச்சல் இவைகளும் தீரும் இச்சாபத்தியம்.

4. அசுவகந்தி சூரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இலவங்கம் | பலம் | 1 | திப்பிலி | பலம் | 16 |
| சிறுநாகப்பூ | | 2 | சுக்கு | | 32 |
| ஏலரிசி | | 4 | அமுக்கராகிழங்கு | | 64 |
| மிளகு | | 8 | சீனிசர்க்கரை | | 27 |

செய்முறை.

மேற்படி சரக்குகளை இளவறுப்பாய் வறுத்திடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்படி சர்க்கரையைக் கலந்து ஒரு புதிய பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் அளவும் அநுபானமும் தீரும்நோயும்.

இதில் மூன்று விரற்கடைகொண்ட பிரமாணம் எடுத்து ஒரு நாளைக்கிரண்டு வேளையும் கால்மண்டலம் வரைக்கும் பசுவின் பாலிலாவது, நெய்யிலாவது, அநுபானஞ் செய்து சாப்பிட்டு, ஒருநாள் விட்டு மறுநாளில் நெய்யில் அப்யங்கனஞ்செய்தால், மேகம், அஸ்திசுரம், அஸ்திவெட்டை, சுவாசம், ஈளை, மேகத்தாலுண்டான பாண்டு, மேகவூறல் இவைகள்தீரும் இச்சாபத்தியம்.

5. கண்டாத்திரி சூரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மேல்தோல்சீவியஇஞ்சி | பலம் | 10 | இலவங்கம் | பலம் | 1 |
| சீரகம் | | 1 | கோஷ்டம் | | 1 |
| மிளகு | | 1 | வாய்விளங்கம் | | 1 |
| தாளிசபத்திரி | | 1 | சீனிசர்க்கரை | | 17 |
| திப்பிலிக்கட்டை | | 1 | | | |

செயமுறை.

இஞ்சியைத் துண்டு துண்டாய்செய்தும் சீரகத்தை முழுசாகவும் தனித்தனியே எலுமிச்சம்பழச்சாத்தில் ஒருநாளெல்லாம ஊறவைத்து மீறுநாளில் வெயிலிலுலர்த்திக்கொண்டு மற்றவைகளையெல்லாம் இளயவறுப்பாய்வறுத்து அதைச் சட்டியில் மேற்படி இஞ்சியையும் சிரகத்தையும் போட்டு வெதுப்பி எடுத்துக்கொண்டு எல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்திடித்து வஸ்திரகாயஞ்செய்து மேற்படி சர்க்கரையைக் கலநது ஒரு புதிய மண்பாண்டத்தில் வைத்துக்கொளளவும.

சாப்பிடும் அளவும் அநுபானமும் தீருநோயும்.

இதில் மூன்று விரற்கடைகொண்ட பிரமாணம் எடுத்து வெந்நீரிலநுபானஞ்செய்து ஒருநாளைக்கு இரண்டுவேளையும் கால்மண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டு 1-நாள்விட்டு மறுநாளைக்கு விரேசனஞ் செய்துகொண்டு 5-வது நாளில் ஓமஸ்நானஞ் செய்தால், பித்தம், வாயு, அரோசகம், அன்னத்துவேஷம், பித்தவெட்டை, வயிறுபொருமல் சூலை, சூசிகாவாயு, கர்ப்பவாயு, பித்தவாயு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீரும்நோயும்.

இதில் மூன்றுவிரற்கடைப் பிரமாணம் எடுத்து ஒருநாளைக்கிரண்டுவேளையும் ஒருமண்டலம்வரைக்கும் இரண்டு அரிசியெடை கந்தசெந்தூரம் கலந்து தேனிலாவது நெய்யிலாவது அநுபானஞ்செய்து சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வது நாளில் விளக்கெண்ணெயில் ஸ்நானஞ்செய்தால், உஷ்ணம், சூலை, வாயு, பித்தவாயு, சேஷ்மங்கள் பொருமல், சொரி, பித்தம், மந்தம், மயக்கம், அஸ்திசுரம், அஸ்திவெட்டை, மூலவாயு, இவைகள் தீரும. பத்தியம் புளி, கசப்பு, புகையிலை, பெண் போகம் இவைநீக்கவும.

7. நிலவாகை சூரணம்.

| | | | | |
|---|---|---|---|---|
| நிலவாகை பலம் | 1 | சுக்கு | பலம் | 1 |
| மிளகு | 1 | வாயவிளங்கம் | | 1 |
| ஓமம் | 1 | சீனிசர்க்கரை | | 5 |

பாகமுறை

மேற்சொன்ன சரக்குகளையெல்லாம் வெயிலிலுலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ்செய்து சர்க்கரையை அதிற்கலந்து ஒருபுதிய மண்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீரும்நோயும்.

இதில் மூன்றுவிரற்கடைப்பிரமாணம்எடுத்து வெந்நீரில் அநுபானஞ்செய்து ஒருநாளைக்கிரண்டுவேளையும் அரைமண்டலம் வரைக்கும் சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வதுநாளில் ஓமஸ்நானஞ்செய்தால் வாயு, பித்தம், உஷ்ணம, வயிற்றுவிடமல, பொருமல், சேஷ்மம், விக்கல, வாந்தி, உடம்பெரிச்சல், சுவாசகாசம், நீரறுகல், மலபந்தம், இருமல், அட்டகுன்மம், மகோதரம், கர்ப்பவலி, கர்ப்பரோகம், கர்ப்பத்தில் புழுக்கள் இவைகள்தீரும். இச்சாபத்தியம.

8. வல்லாரைசூரணம்.

| | | |
|---|---|---|
| பாலில் அவித்துலர்த்திய வல்லாரையிலை | பலம் | 10 |
| இலவங்கம் | | 1 |
| ஏலரிசி | | 1 |
| சாதிக்காய | | 1 |
| சாதிபத்திரி | | 1 |
| மாசிக்காய் | | 1 |

| | | |
|---|---|---|
| தாளிசபத்திரி | பலம் | 1 |
| கடுக்காய்த்தோல் | | 1 |
| நெல்லிக்காய் | | 1 |
| தான்றிக்காய்த்தோல் | | 1 |
| சீனிசர்க்கரை | | 19 |

செய்முறை.

மேற்படி வல்லாரையிலே தவிர மற்றசரக்குகளையெல்லாம் இள வறுப்பாய் வறுத்திடித்து வஸ்திரகாயஞ்செய்து சர்க்கரையைக்கல ந்து ஒருபுதிய மண்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் அளவும், அனுபானமும், தீரும்நோயும்.

இதில் மூன்றுவிரற்கடைப்பிரமாணம் ஒருநாளைக் கிரண்டுவே ளையும் ஒருமண்டலம் வரைக்கும்நெய்யில் அனுபானஞ்செய்து ஸ்நா னம், சௌளம்முதலிய நாள்களில் மருந்தைவிட்டு ஒருமண்டலம் வரைக்குஞ்சாப்பிட்டால் மேகம், தேகம் சூடாய்க்காணப்படுதல், பிர மியம், கிரந்தி, நீரறுகல், நீரெரிச்சல், கண்ணெரிச்சல்,கண்புகைச்சல் மூலச்சூடு, நீர்ச்சூடு இவைகளும் இதில் அப்பிரகசெந்தூரஞ் சேர்த் து முன்போலவே சாப்பிட்டால மது மேகம, தந்திமேகம், க்ஷயம், இவைகளுந்தீரும். இச்சாபத்தியம்.

9. சஞ்சீவிசூரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீந்தில்தண்டுசூரணம் | வீசை | 1 | இலவங்கம் | பலம் | 1 |
| சாதிக்காய் | பலம் | 1 | கசகசா | | 1 |
| சாதிபத்திரி | | 1 | தாளிசபத்திரி | | 1 |
| வால்மிளகு | | 1 | மாசிக்காய் | | 1 |
| ஏலரிசி | | 1 | சீனிசர்க்கரை | | 6 |

செய்முறை.

மேலேசொன்ன சீந்தில்சூரணம் வீசைஒன்றை ஒருபுதுச்சட்டி யில்போட்டு அதில்ஒருபடி பசும்பால்விட்டு அத்துடன்அரைவீசை சீனிசர்க்கரைகலந்து வற்றுமட்டும் வெயிலில் வைத்து வற்றியபின் மறுபடியும் இடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு மற் றைய (8) சரக்குகளையும் இளவறுப்பாய்வறுத்து இடித்து வஸ்திர காயஞ்செய்து முன்சூரணத்திற்சேர்த்து கூடவே மேற்படி சீனிசர் க்கரையையும் நன்றாகக்கலந்து ஒரு புதுப்பாண்டத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

சாப்பிடும் வகையும், அநுபானமும், தீருநோயும்.

இதில் வேளைக்கு மூன்றுவிரற்கடைப்பிரமாணம் எடுத்து நெய்யிற்குழைத்துக்கொண்டு, பிறகு அரைக்கால்வராகனெடைநன்றாய் முடித்த அப்பிரகசெந்தூரஞ் சேர்த்து ஒருமண்டலம் சாப்பிடவேண்டும். இப்படி சாப்பிட்டால் வெள்ளை, நீரிழிவு, அஸ்திசுரம், மூலச்சூடு, பித்தங்கள், கண், கை, கால் இவைகளில் எரிச்சல் தேகத்தில் நமைச்சல் இவைகள்தீரும். பத்தியம் புளி குறைவாகச்சேர்த்துக் கொள்ளவேண்டும்.

10. ஏலாதிசூரணம்.

| | | | |
|---|---|---|---|
| இலவங்கம் வராகனெடை | 1 | மிளகு வராகனெடை | 2 |
| சிறுநாகப்பூ | 4 | தாளிசபத்திரி | 8 |
| கூகைநீறு | 16 | சுக்கு | 32 |
| ஏலரிசி | 64 | சீனிசர்க்கரை பலம் | 12 |

செய்முறை.

சர்க்கரையையும் கூகைநீற்றையுந்தள்ளி மற்றைய ஆறுசரக்குகளையும் இளவறுப்பாய் வறுத்திடித்து வஸ்திரகாயஞ் செய்யும்போது கூகைநீற்றைத்தூள்பண்ணிக் கூடச்சேர்த்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு ஒரு புதிய மண்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும்வகையும், அநுபானமும், தீருநோயும்.

இதில் வேளைக்கு மூன்றுவிரற்கடைகொண்ட பிரமாணம்நெய்யிலிழைத்து ½-மண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டுக்கொண்டு வந்தால் பித்தம், வாய்வு, கிரந்தி ஊறல், சொறிசிரங்கு, பெரும்பாடு இவைகள்தீரும். பத்தியம் உஷ்ணமானபதார்த்தங்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

# மூன்றாவது அத்தியாயம்.

## சூரணவர்க்கம்.

சம்பூர்ணம்.

உ

கடவுள் துணை

# நான்காவது அத்தியாயம்.

## இலேகவர்க்கம்.

### 1. கரிசாலை இலேகம்.

| | | |
|---|---|---|
| மஞ்சள் கரிசலாங்கண்ணிச்சாறு | படி | 2 |
| செப்பு நெருஞ்சில்சாறு | | 2 |
| சிறு கீரைச்சாறு | | 1 |
| சிறு பொடுதலைச்சாறு | | 1 |
| கீழ்வாய் நெல்லிச்சாறு | | 1 |
| சிறு செருப்படிச்சாறு | | 1 |

முதற்கஷாயவகை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாவற்பட்டை | பலம் | 1 | கருங்காலிப்பட்டை | பலம் | 1 |
| அத்திப்பட்டை | | 1 | தென்னம்பூ | | 1 |

இரண்டாவது கஷாயவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிளகு | பலம் | 3 | மிளகரணைவேர் | பலம் | 3 |
| அவிரிவேர் | | 3 | சிற்றாமுட்டி | | 3 |
| பேராமுட்டி | | 3 | வெட்டிவேர் | | 3 |

சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீரகம் | பலம் | 1 | சிறுநாகப்பூ | பலம் | 1 |
| ஏலரிசி | | 1 | கடுக்காய்ப்பூ | | 1 |
| இலவங்கம் | | 1 | கோஷ்டம் | | 1 |
| சாதிக்காய் | | 1 | அக்கராகாரம் | | 1 |
| சாதிபத்திரி | | 1 | அதிமதுரம் | | 1 |
| ஓமம் | | 1 | தாளிசபத்திரி | | 1 |
| குரோசானிஓமம் | | 1 | சுக்கு | | 1 |
| திப்பிலி | | 1 | மிளகு | | 1 |
| கடுக்காய் | | 1 | நெல்லிக்காய் | | 1 |
| தான்றிக்காய் | | 1 | | | |

### பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பனைவெல்லம் | பலம் | 8 | பசுநெய் | படி | 1 |
| கரும்புவெல்லம் | | 8 | தேன் | | 1 |
| பசும்பால் | படி | 4 | | | |

### இதிலிடுஞ் செந்தூரவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திரிலோகசெந்தூரம் | பலம் | 1 | மண்டூர செந்தூரம் | பலம் | 1 |

### செய்முறை.

முன்சொன்னசாறுகளை யெல்லாம் செவ்வையாய் வடிகட்டி ஒருபாண்டத்தில் வைத்துக்கொண்டு முதற்கஷாயவகைகளை நன்றா யிடித்து எட்டுபடி சலத்தில் போட்டு ஒருபடியளவாகக் காய்ச்சி இறக்கி முன் சாற்றிற் சேர்த்து நன்றாய்க்கலக்கி மறுபடி அடுப்பி லேற்றி 9-படியாயிருக்கின்ற இந்தச்சாற்றை படியாகக் காய்ச்சி யிறக் கிப்பிறகு இரண்டாவது கஷாயவகைகளை நன்றாய் நருக்கி 8-படி சல த்தில் போட்டு அரைப்படியாகக்காய்ச்சி முன் நாலரைப்படி சாற் றோடு சேர்த்து 5-படியாக்கி அடுப்பேற்றிக் குழம்புந்தருணத்தில் மேற்படி இரண்டு வெல்லங்களையும் பாலிற்கரைத்து வடித்து அந் தக்குழம்போடு கலந்து வெல்லம்பாகு வருந்தருணத்தில் சூரணவ கைகளை இளவறுப்பாய் வறுத்து இடித்து வடிகட்டிவைத்திருந்து அந்தப்பாகில் கொஞ்சங்கொஞ்சமாகப் போட்டுக்கிளறிப் பிறகு நெ ய்யையும் அதின் பிறகு தேனையும்விட்டு நன்றாய்க்கிளறி இறக்கிவிடு ந்தருணத்தில் ஷை செந்தூரங்களை நிறுத்துப்போட்டு செவ்வையாய் மத்தித்து வழித்து வேறு பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும்.

### சாப்பிடும்வகையும், தீருநோயும்.

இதில் புன்னைக்காய்ப் பிரமாணம் இரண்டுவேளையும் ஒருமண் டலம் வரைக்கும் சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வதுநாள் அஸ்வகந்தி தயிலத்தால் அப்பியங்கனஞ்செய்தால், பாண்டு, பித்தவெட்டை கை கால் ஓய்ச்சல், கைகாலெரிச்சல், வாந்தி, மயக்கம், அதிதூக்கம், வீக் கம், நீர்ச்சுரம், கிராணி, அரோசகம், இவைகள் தீரும். பத்தியம். அரைப்புளி, அரையுப்பு சேர்க்கவேண்டும்.

## 2. கண்டாத்திரி இலேகம்.

சாறுவகை.

| | | |
|---|---|---|
| சுண்ணாம்பு நீக்கிய இஞ்சிச்சாறு | படி | 1 |
| கண்டங்கத்தரிச்சாறு | | 1 |
| நெருஞ்சில்சாறு | | 1 |
| முள்ளங்கிச்சாறு | | 1 |
| எலுமிச்சம்பழச்சாறு | | 1 |

சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | வாய்விளங்கம் | பலம் | 1 |
| திப்பிலி | | 1 | இலவங்கம் | | 1 |
| மிளகு | | 1 | ஏலரிசி | | 1 |
| சீரகம் | | 1 | தாளிசபத்திரி | | 1 |

பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பசும்பால் | படி | 2 | பனைவெல்லம் | பலம் | 8 |
| பசுநெய் | | ½ | தேன் | படி | ½ |

செய்முறை.

முன்சாறுகளையெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து அடுப்பேற்றி குழம்பாகுந்தருணத்தில் வெல்லத்தைப் பாலில்கரைத்து வடிகட்டி அந்தக்குழம்போடுகலந்து துழாவிக்கொண்டேயிருந்து வெல்லப்பாகு வருஞ்சமயத்தில் முன்சூரணவகைகளை இளம்வறுப்பாய் வறுத்திடித்து வடிகட்டிவைத்திருந்து அதில் கொஞ்சங்கொஞ்சமாகக் கொட்டிக்கிளறிப் பிறகு நெய்யையும் அதின்பிறகு தேனையும்விட்டு நன்றாய்க்கிளறி வேறுபாண்டத்திலவழித்து வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும்வகையும், தீரும்நோயும்.

இதில் பாக்களவு இரண்டு வேளையும் ஒருமண்டலம்வரைக்கும் சாப்பிட்டு இரண்டுநாள் விட்டு 3-வது நாளைக்குக் கற்றாழந்தயிலத்தால் அப்பியங்கனம் செய்தால் வாயு, பித்தம், வாந்தி, சூலை, வலி, அரோசகம், அன்னத்துவேஷம், குன்மம், பொருமல், விக்கல், பித்த எரிச்சல், மண்டையிடிப்பு, மயக்கம், இவைகள் தீரும். இச்சாபத்தியம.

## 3. பஞ்சதீபாக்கினி இலேகம்.

### சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | திப்பிலி | பலம் | 1 |
| மிளகு | | 1 | ஏலரிசி | | 1 |
| சீரகம் | | 1 | | | |

### பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பசும்பால் | படி | 2 | பனைவெல்லம் | பலம் | 8 |
| பசுநெய் | | ½ | தேன் | | 1 |

### செய்முறை.

மேற்படிபாலில் வெல்லத்தைக்கரைத்து வடிகட்டி அடுப்பி லேற்றிப் பாகுவருஞ்சமயத்தில் சூரணஇனுசுகளைச் சூரணஞ்செய்து வடிகட்டி மேற்படி பாகிலகொஞ்சங் கொஞ்சமாக்கொட்டிக் கிளறிப் பிறகு நெய்யையும் அதின்பிறகு தேனையும் விட்டுக்கிளறி வேறுபா ண்டத்தில் வழித்து வைத்துக்கொள்ளவும்.

### சாப்பிடும் வகையும், தீரும்நோயும்.

இதில் ஒருபாக்களவு ஒருநாளைக்கு இரண்டுவேளையும் ஒருமண் டலம்வரைக்கும் சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வதுநாளில் அரக்குத்தயி லத்தால் அப்யங்கனஞ்செய்தால், வாதம், பித்தம்,உஷ்ணம், உளைச் சல், சூத்தல் வலி, கடுப்பு, எரிச்சல், பேதி, பொருமல், வாதகிராணி அத்திசுரம், அத்திவெட்டை, வாந்தி, சகலசுரம், இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## 4. கண்டங்கத்தரி இலேகம்.

### கஷாயம்

கண்டங்கத்தரிசமூலம் வீசை

### சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | வாய்விளங்கம் | பலம் | 1 |
| திப்பிலி | | 1 | ஓமம் | | 1 |
| மிளகு | | 1 | குரோசானி ஓமம் | | 1 |
| கடுக்காய் | | 1 | இலவங்கப்பட்டை | | 1 |
| நெல்லிக்காய் | | 1 | சீரகம் | | 1 |

| | | | |
|---|---|---|---|
| தான்றிக்காய் | 1 | கண்டுபாரங்கி | 1 |
| யானைத்திப்பிலி | 1 | கோஷ்டம் | 1 |
| தாளிசபத்திரி | 1 | அக்கராகாரம் | 1 |

பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பனைவெல்லம் | பலம் | 16 | பசுநெய் | படி | ½ |
| பசும்பால் | படி | 1 | தேன் | | ½ |

செய்முறை.

மேற்படி கண்டங்கத்தரியை 8-படி சலம்விட்டு ஒருபடிக்குக் காய்ச்சிப் பிறகுவெல்லத்தைப் பாலில்கரைத்து வடிகட்டி முன்கஷாயத்தோடுசேர்த்து அடுப்பேற்றி வெல்லப்பாகுவருஞ் சமயத்தில்மேற்படி சூரணவகைகளை சூரணித்து வடிகட்டிக் கொஞ்சங்கொஞ்சமாக அத்தப்பாகில்கொட்டிக்கிளறிப் பிறகு நெய்யையும், அதின் பிறகுதேனையும்விட்டு நன்றாய்க்கிளறி வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும்வகையும், தீரும்நோயும்.

இதில் ஒரு பாக்களவாயெடுத்து ஒருநாளைக்கு இரண்டுவேளையும் ஒருமண்டலம் வரைக்கும் சாப்பிட்டு 2-நாள் விட்டு 3-வது நாள் எள்ளெண்ணெயால் அப்பங்களை செய்தால், குழல்வாதம், ஒருபக்கக்குத்தல், கிருமி, கர்ப்பவாயு, உஷ்ணம், பித்தம், இவைகள் தீரும். இச்சாபத்தியம்.

5. சிந்தாதி இலேகம்.

கஷாயவகை,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆறுமாதக்காடி | படி | 10 | புளித்தமோர் | படி | 10 |
| புளியிலை | வீசை | 1½ | துருப்பிடித்தஇரும்புவீ | | 1 |

சாறுவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கரிசலாங்கண்ணிச்சாறு | படி | 2 | இஞ்சிச்சாறு | படி | 1 |
| எலுமிச்சம்பழச்சாறு | | 1 | நெருஞ்சிற்சாறு | | 1 |
| சிறுகீரைச்சாறு | | 1 | செருப்படிச்சாறு | | 1 |
| தென்னம்பூச்சாறு | | 1 | கீழ்வாய்நெல்லிச்சாறு | | 1 |

சூரணவகை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | சடாமாஞ்சில் | பலம் | 1 |
| திப்பிலி | | 1 | சீரகம் | | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிளகு | பலம் | 1 | வால்மிளகு | பலம் | 1 |
| ஓமம் | | 1 | ஏலரிசி | | 1 |
| கடுக்காய் | | 1 | இலவங்கம் | | 1 |
| நெல்லிக்காய் | | 1 | தாளிசபத்திரி | | 1 |
| தான்றிக்காய் | | 1 | இலவங்கப்பட்டை | | 1 |
| கோஷ்டம் | | 1 | ஆனைத்திப்பிலி | | 1 |

பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பனைவெல்லம் | பலம் | 10 | பசும்பால் | படி | 4 |
| பசுநெய் | படி | 1 | தேன் | வீசை | 1 |

செய்முறை.

மேலே சொன்ன காடியையும், மோரையும் ஒன்றாக் கலந்து அதில் புளியிலையை யிடித்தும, இரும்மை ஒரு துண்டாகவும் போட்டு அடுப்பிலேற்றி 2½-படி இருக்குமபடி காய்ச்சி யிறக்கி இரும்புச் சட்டியில் வடித்து அதில் மேற்படி சாறுகளைக் கலந்து அடுப்பேற்றித் துழாவிக்கொண்டிருந்தால் குழமபாய்வரும். அந்தச் சமயத்தில் மேற்படி பாலில் வெல்லத்தைக் கரைத்து வடிகட்டி முன்சாற்றிற் கலந்து துழாவிக்கொண்டிருந்து வெல்லப்பாகுவருஞ் சமயத்தில் சூரணஞ்செய்து வைத்திருந்து அந்தப் பாகில் கொஞ்சங் கொஞ்சமாகக் கொட்டிக்கிளறிப் பிறகு நெய்யையும், அதின் பிறகு தேனைவிட்டு நன்றாய்க் கிளறிவைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் வகையும் தீரும்நோயும்.

இதில் 2½-வாரகனெடை வீதம் ஒரு நாளைக்கு 2-வேளையும் ஒருமண்டலம் வரைக்கும் சாப்பிட்டு 2-நாள் ஆறவிட்டு 3-நாள் எள்ளெண்ணெயில் ஸ்நானஞ்செய்தால், பாண்டு பித்தவெட்டை, பித்தவெட்டை, பித்தவாயு, மயக்கம், அக்கினிமந்தம், உஷ்ணம, மகோதரம், பிலிகை சோகை, கிராணி, மூலம, உடம்பெரிச்சல், இளைப்பு, கோஷ்ம, உப்பிசம், வயிற்றிரைச்சல் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## 6. மகாவில்வாதி இலேகம்.

கஷாயவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வில்வவேர் | பலம் | 100 | வெட்டிவேர் | பலம் | 3 |
| பெருவாகைவேர் | | 3. | பாதிரிவேர் | | 3 |

| | | | |
|---|---|---|---|
| நன்னாரிவேர் | 3 | பருவிளாவேர் | 3 |
| சிற்றாமல்லி | 3 | பேராமல்லி | 3 |
| சிறுவிளாவேர் | 3 | சிறுவாகைவேர் | 3 |
| பசுமுன்னைவேர் | 3 | முசுமுசுக்கைவேர் | 3 |
| சித்திரமூலவேர் | 3 | தேற்றான்கொட்டை | 3 |

சாறுவகை.

கொடிஎலுமிச்சம்பழச்சாறு படி 1 இஞ்சிச்சாறு படி 1

சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | திப்பிலி | பலம் | 1 |
| மிளகு | | 1 | கடுக்காய் | | 1 |
| நெல்லிக்காய் | | 1 | தான்றிக்காய் | | 1 |
| இலவங்கம் | | 1 | ஏலரிசி | | 1 |
| கோஷ்டம் | | 1 | அதிமதுரம் | | 1 |
| சந்தனத்தூள் | | 1 | நல்லசீரகம் | | 1 |
| கருஞ்சீரகம் | | 1 | வாய்விளங்கம் | | 1 |
| சாஸ்திரபேதி | | 1 | தாளிசபத்திரி | | 1 |
| சண்பகப்பூ | | 1 | அக்கராகாரம் | | 1 |
| கொத்துமல்லி | | 1 | நிலாவிளா | | 1 |
| சிறுதேக்கு | | 1 | திராட்சைப்பழம் | | 1 |
| பேரீச்சம்பழம் | | 1 | வில்வவேர் | | 1 |
| வாலுளுவை அரிசி | | 1 | சடாமாஞ்சில் | | 1 |
| சிறுநாகப்பூ | | 1 | பருத்தியிலை | | 1 |
| வேப்பங்கொட்டை | | 1 | உலர்ந்த இலுப்பைப்பூ | | 1 |

பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சர்க்கரை | படி. | 32 | பசுவின்பால் | படி. | 2 |
| பசுநெய் | | ½ | தேன் | | 1 |

செய்முறை.

மேலேசொன்ன கஷாயவகைகளை நையவிடித்து 16-படி சலத்தில் போட்டு 2-படியாகக் காய்ச்சிப் பிறகு சர்க்கரையை பாலில் கரைத்து வடிகட்டி அதை அந்தக்கஷாயத்தில் கலந்து அடுப்பேற்றி வெல்லப்பாகு வருஞ்சமயத்தில் மேற்படி சூரணதினுசுகளை இளவ

றுப்பாய் வறுத்து இடித்துவைத்திருந்து அந்தப்பாகில் கொஞ்சங் கொஞ்சமாகக் கொட்டிக்கிளறிப் பிறகு நெய்யையும் அதின் பிறகு தேனேயும்விட்டு நன்றாய்க்கிளறிவழித்து வேறுபாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் வகையும் தீரும்ரோயும.

இதில் ஒரு புன்னைக்காயளவு ஒருநாளைக்கு இரண்டுவேளையும் ஒருமண்டலம் வரைக்கும் அயசெந்தூரத்தைச் சாப்பிட்டு 2-நாள் விட்டு 3-வது நாளில் எள்ளெண்ணெயால் ஸ்நானஞ்செய்தால், சுவாசம். அரோசகம், வீக்கம், வாந்தி, பாண்டு, வயிற்றெரிச்சல், வயிற்றுப்பிசம், கிராணி, கைகாலெரிச்சல், ஓக்காளம், அன்னத்துவேஷம, சூலை, கபம், சுரம், பித்தம், அஸ்திசுரம், மடுந்தீடு, அதிசாரம் உள்வியாதி, இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

7. கூஷ்மாண்ட இலேகம்.

சாறுவகை.

| | | |
|---|---|---|
| கலியாணபூசினிக்காய்ச்சாறு | படி | 4 |
| தாழைவிழுதிச்சாறு | | 1 |
| தென்னம்பூச்சாறு | | 1 |
| எலுமிச்சம்பழச்சாறு | | 1 |

சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீரகம் | பலம் | 1 | கொத்துமல்லி | பலம் | 1 |
| கோஷ்டம் | | 1 | மிளகு | | 1 |
| மாசிக்காய் | | 1 | ஏலரிசி | | 1 |
| சாதிக்காய் | | 1 | சாதிபத்திரி | | 1 |
| அதிமதுரம் | | 1 | தாளிசபத்திரி | | 1 |

பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பசுவின்பால் | படி | 2 | கரும்புசர்க்கரை | பலம் | 10 |
| பசுநெய் | படி | 1 | தேன் | படி | 1 |

செய் முறை.

மேற்படி சாறுகளை யெல்லாம் தனித்தனி வடித்து ஒன்றாய்ச் சேர்த்துப் பிறகு சர்க்கரையைப் பாலிற்கரைத்து வடிகட்டி நான் சாற்றோடு சேர்த்து மண்பாண்டத்தில் விட்டு அடுப்பேற்றித்தீ.

வல்லப்பாகு வருஞ்சமயத்தில் மேற்படி சூரணதினுசுகளை ப்பாய் வறுத்திடித்து வடிகட்டி வைத்திருந்து அந்தப்பா கில் கொஞ்சங் கொஞ்சமாகக் கொட்டிக்கிளறிப் பிறகு நெய்யையும் அதின் பிறகு தேனையுமவிட்டு நன்றாய்க்கிளறி வேறு பாத்திரத்தில் வழித்து வைத்துக்கொள்ளவும.

சாப்பிடும் வகையும், தீரும்நோயும்.

இதில் ஒரு புன்னைக் காயளவு ஒருநாளைக்கு இருவேளையும்ஒரு மண்டலம் வரைக்கும சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வது நாளில்·ஓமஸ் நானஞ்செய்தால, காமாலை, சோகை, அஸ்திசுரம, அஸ்திவெட்டை, வெள்ளை, உஷ்ணம, நீர்சுருக்கு, இவைகள் தீரும தேக்பலஷ்டயன்ா டாம பத்தியம புளி, புகையிலை நீக்கவும.

8. ரசபங்கவில்வாதி இலேகம்.

கஷாயவகை,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வில்வவேர் | வீசை | 1 | முக்காவேளை | பலம | 1 |
| சங்கம்வோ | பலம | 1 | சிறுமல்லி | | 5 |
| சிற்றாமுட்டி | | 5 | யோமல்லி | | 5 |
| முதியார்கூந்தல | | 5 | ஆற்றுமுள்ளி | | 5 |
| சத்திச்சாட்டரணைவேர் | | 5 | கண்டகத்திரிவேர் | | 5 |
| வெட்டிவேர் | | 5 | சிந்தில்கொடி | | 5 |
| சித்திரமூலவேர் | | 5 | பொன்முசுட்டை | | 5 |
| கன்னரிவேர் | | 5 | சிறுவேக்கு | | 5 |

சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | திப்பிலி | பலம் | 1 |
| மிளகு | | 1 | கடுக்காய் | | 1 |
| நெல்லிக்காய் | | 1 | தான்றிக்காய் | | 1 |
| இலவங்கம | | 1 | ஏலரிசி | | 1 |
| நல்லசீரகம | | 1 | கருஞ்சீரகம் | | 1 |
| கோஷ்டம் | | 1 | தாளிசபத்திரி | | 1 |
| சன்னராஷ்டிகம் | | 1 | துமமராஷ்டகம் | | 1 |
| கொத்துமல்லி | | 1 | இலவங்கப்பட்டை | | 1 |
| அக்கராகாரம் | | 1 | யானைத்திப்பிலி | | 1 |
| வால்மிளகு | | 1 | சாதிக்காய் | | 1 |

பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கரும்புவெல்லம் | பலம் | 32 | பசுவின்பால் | படி | 2 |
| பசுவின்செய் | | 1 | தேன் | | 1 |

செய்முறை.

மேலே சொன்ன கஷாயவகைகளை யெல்லாம் நருக்கி எட்டுப் படி சலத்திற் போட்டு ஒரு படியாய்க் காய்ச்சிப் பிறகு வெல்லத்தைப் பாலில் கரைத்து வடிகட்டி மேற்படி கஷாயத்தில் சேர்த்து அடுப்பேற்றி வெல்லப்பாகுவருஞ் சமயத்தில் மேற்படி சூரணவகைகளை இளவறுப்பாய் வறுத்து இடித்து வடிகட்டி வைத்திருந்து அந்தப் பாகில் கொஞ்சங் கொஞ்சமாகக் கொட்டிக்கிளறி பிறகு நெய்யையும் அதின் பிறகு தேனையும் விட்டு நன்றாய்க்கிளறி வேறுபாத்திரத்தில் வழித்து வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் வகையும், தீரும்நோயும்.

இதில் $1\frac{1}{2}$-வராகனெடை வீதமே ஒரு நாளைக்கு இரண்டுவேளையும் ஒருமண்டலம வரைக்கும் சாப்பிட்டால், பித்தவெட்டை. ஆறுவிதமான பாண்டு எட்டுவகை க்ஷயம், எட்டுவகை குன்மம், ஆறுவகைக் கிராணி வாய்கசைப்பு, ஒக்காளம்வாயூறல் அக்கினிமந்தம்,சூலை, கைகாலெரிச்சல், பித்தம், ஆகிய இவைகளும், இதில் திரிலோகசெந்தூரமாலும், வாலரசசெந்தூரமாலும், அயசெந்தூரமாலும், பணவெடையளவாகவைத்துச் சாப்பிட்டால், சகல வகைப்பித்தங்களும், தொண்ணூற்றாறு சேஷ்மங்களும், நீங்கும், பத்தியம், புளிகைப்பு, புளியிலை, எள் இவை நீக்கவும்.

9. மகாகண்டங்கத்திரி இலேகம்.

கஷாயவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆற்றுமுள்ளி | பலம் | 100 | கரிமுள்ள | பலம் | 50 |
| சிற்றாமுட்டி | | 1 | பேராமுட்டி | | 1 |
| மிளகரணைவேர் | | 1 | சித்திரமூலவேர் | | 1 |
| ஆதண்டைவேர் | | 1 | சிறுகாஞ்சொரிவேர் | | 1 |
| வெட்டிவேர் | | 1 | முக்காவேளை | | 1 |
| கோரைப்புல் | | 1 | உத்தாமணி | | 1 |
| கழற்சிக்கொடி | | 1 | மாவிலிங்கப்பட்டை | | 1 |

சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | திப்பிலி | பலம் | 1 |
| மிளகு | | 1 | கடுக்காய் | | 1 |
| நெல்லிக்காய் | | 1 | தான்றிக்காய் | | 1 |
| நல்லசீரகம் | | 1 | கருஞ்சீரகம் | | 1 |
| சன்னராஷ்டகம் | | 1 | அக்கராகாரம் | | 1 |
| இலவங்கப்பட்டை | | 1 | சாதிக்காய் | | 1 |
| சாதிபத்திரி | | 1 | தும்மராஷ்டகம் | | 1 |
| இலவங்கப்பத்திரி | | 1 | | | |

பாகதிரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொடிஎலுமிச்சம்பழச்சாறு | படி | ½ | பசுவின்பால | படி | 2 |
| கரும்புச்சர்க்கரை | பலம | 15 | பசுநெய் | | ½ |
| தேன் | படி | ½ | | | |

செய்முறை.

மேற்சொன்ன கஷாயவகைகளை நருக்கி 16-படி சலத்தில் போட்டு 2-படியாக இறக்கிப் பிறகு சர்க்கரையைப் பாலில்கரைத்து வடிகட்டி இந்தப்பாலையும் மேற்படிச் சாற்றையும மேற்படி கஷாயத்தில் விட்டுக்கலந்து அடுப்பேற்றி வெல்லப்பாகுவருஞ் சமயத்தில் மேறபடி சூரணவகைகளை இளைறப்பாய் வறுத்திடித்து வடிகட்டி வைத்திருந்து அந்தப் பாகில் கொஞ்சங் கொஞ்சமாக கொட்டிக்கிளறிப் பிறகு நெய்யையும் அதின் பிறகு தேனையுமவிட்டு நன்றாய்க் கிளறி வேறு பாத்திரத்தில் வழித்து வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் வகையும், தீரும்ரோயும்.

இதில் ஒரு புன்னைக்காயளவு எடுத்து அதில் தாளகபற்பமும், அயசெந்தூரமும் வைத்து ஒருநாளைக்கு இரண்டுவேளையும் ஒருமண்டலம்வரைக்கும் சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வது நாளில் எள்ளெண்ணெயில் ஸ்நானஞ்செய்தால், எண்வகைக்ஷயம், எண்வகை குன்மம், எண்பது வாதம், இளப்பு, நீர்க்கோவை, இசிவு, கழல்வாதம், கர்ப்பவெட்டை, கர்ப்பசூலை, கர்ப்பபுழுக்கள் இவைகள் தீரும் இச்சாபத்தியம.

## 10. கபாட இலேகம்.

கஷாயவகை:.

| | | | |
|---|---|---|---|
| நாவற்பட்டை | பலம் 10 | அரசம்பட்டை பலம் | 10 |
| அத்திப்பட்டை | 10 | கருங்காலிப்பட்டை | 10 |
| ஒதியம்பட்டை | 10 | | |

சூரணவகை.

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்தகஞ்சா | பலம் 1 | மிளகு பலம் | 1 |
| சுக்கு | 1 | சீரகம் | 1 |
| ஓமம் | 1 | குரோசாணிஓமம் | 1 |
| கடுக்காய்ப்பூ | 1 | காட்டாத்திப்பூ | 1 |
| வால்மிளகு | 1 | சிறுநாகப்பூ | 1 |
| கொத்துமல்லி | 1 | ஏலரிசி | 1 |
| இலவங்கம் | 1 | சாதிபத்திரி | 1 |
| சாதிக்காய் | 1 | அதிவிடயம் | 1 |
| சிறுதிப்பிலி | 1 | | |

பாகதிரவியங்கள்.

| | | | |
|---|---|---|---|
| பனைவெல்லம் | பலம் 10 | நெய் படி | ½ |
| தேன் | படி ½ | | |

செய்முறை.

மேற்படி கஷாயவகைகளை எட்டுபடி சலத்தில் நையநருக்கிப் போட்டு அடுப்பேற்றி ஒருபடியாகக்காய்ச்சி அதில் வெல்லத்தைக் கரைத்து வடிகட்டி அடுப்பேற்றி துழாவிக்கொண்டிருந்து வெல்லப் பாகுவருஞ் சமயத்தில் மேற்படி சூரணவகைகளை இளவறுப்பாய் வறுத்திடித்து வடிகட்டி வைத்திருந்து அந்தப்பாகில் கொஞ்சங் கொஞ்சங் கொட்டிக்கிளறிப் பிறகு நெய்யையும், அதின்பிறகு தேனையும்விட்டு நன்றாக்கிளறி வேறு பாத்திரத்தில் வழித்துவைத்துக் கொள்ளவும்.

சாப்பிடும்வகையும், தீருநோயும்.

இதில் ஒரு கொட்டைப்பாக்களவு வீதம் ஒருநாளைக்கு இரண்டு வேளையும ஒருமண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வதுநாள் எள்ளெண்ணெயில் ஸ்நானஞ்செய்தால், குஷ்காவாயு

கிராணி, கடுப்பு, பாண்டு, பேதி, உஷ்ணவாயு, மூலவாயு, கிராணி வாயு, இவைகள் தீரும். பத்தியம் துவருள்ளபண்டங்களும் புளிப்புள்ளபண்டங்களும் சேர்க்கவும்.

## 11. மதுஸ்மிக இலேகம்.

### சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பறங்கிச்சக்கை | பலம் | 10 | அமுக்கராகிழங்கு | பலம் | 10 |
| நிலப்பனைக்கிழங்கு | | 5 | தண்ணீர்விட்டான்கிழங்கு | | 2 |
| நன்னாரிவேர் | | 1 | சங்கமவேர் | | 1 |
| சுக்கு | | 1 | திப்பிலி | | 1 |
| மிளகு | | 1 | கடுக்காய் | | 1 |
| நெல்லிக்காய் | | 1 | தான்றிக்காய் | | 1 |
| இலவங்கப்பட்டை | | 1 | இலவங்கப்பத்திரி | | 1 |
| சிறுநாகப்பூ | | 1 | வாய்விளங்கம் | | 1 |
| கொத்துமல்லி | | 1 | நல்லசீரகம் | | 1 |
| கருஞ்சீரகம் | | 1 | ஓமம் | | 1 |
| குரோசாணிஓமம் | | 1 | சன்னராஷ்டகம் | | 1 |
| சந்தனத்தூள் | | 1 | கண்டுபாரங்கி | | 1 |
| கண்டங்கத்திரிவேர் | | 1 | சித்திரமூலவேர் | | 1 |
| வெட்டிவேர் | | 1 | தக்கோலம் | | 1 |
| வால்மிளகு | | 1 | திராட்சைப்பழம் | | 1 |
| பேரீச்சம்பழம் | | 1 | வெட்பாலைவேர் | | 1 |
| தாமரைக்கிழங்கு | | 1 | சாதிக்காய் | | 1 |
| இலவங்கம் | | 1 | சாதிபத்திரி | | 1 |
| கருவேப்பிலை | | 1 | | | |

### பாகத்திரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கரும்புசர்க்கரை | பலம் | 32 | பசுவின்பால் | படி | 4 |
| தேன் | படி | ½ | பசுநெய் | படி | 1 |

### வாசனைத்திரவியங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கரும்புசர்க்கரை | பலம் | 32 | பசுவின்பால் | படி | 4 |
| தேன் | படி | ½ | பசுநெய் | | ½ |

### வாசனைத் திரவியங்கள்.

குங்குமப்பூ வராகனெடை ¼ கோரோசனம் வராகனெடை ¼
பச்சைககர்ப்பூரம் ¼

### செய்முறை.

மேற்படி சர்க்கரையைப் பாலில்கரைத்து அடுப்பேற்றித் துழாவிக்கொண்டிருந்து வெல்லப்பாகுவருஞ்சமயத்தில் மேற்படி சூரணவகைகளை இளவறுப்பாய்வறுத்திடித்து வடிகட்டி வைத்திருந்து அந்தப்பாகில் கொஞ்சம் கொஞ்சமாகக் கொட்டிக்கிடறிப் பிறகு நெய்யும், அதின் பிறகு தேனையும் விட்டுக்கிண்டி இறக்குமுகத்தில் மேற்படி வாசனைத்திரவியங்களைத் தூள்படுத்தி அதில்கொட்டி நன்றாய்க் கிளறிவழித்து வேறுபாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும்.

### சாப்பிடும் வகையும் தீரும்நோயும்.

இதில் ஒரு கொட்டைப்பாக்களவு வீதம் ஒருநாளைக்கிரண்டு வேளையும் ஒருமண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வது நாள் எள்ளெண்ணெயில் ஸ்நானஞ்செய்தால், கிரந்தி, சூலை, கண்டமாலை, வாயு, வாதம், பிரமியங்கள், லிங்கப்புற்று, சேஷ்மம், இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

# நான்காவது அத்தியாயம்.

## இலேகவர்க்கம்.

சம்பூர்ணம்.

உ

கடவுள் துணை.

# ஐந்தாவது அத்தியாயம்.

## திப்பிலிரசாயனம்.



சூரணவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிறுதிப்பிலி | பலம் | 10 | மிளகு | பலம் | 5 |
| சுக்கு | | 1 | நல்லசீரகம் | | 1 |
| கருஞ்சீரகம் | | 1 | ஓமம் | | 1 |
| குரோசாணிஓமம் | | 1 | சன்னராஷ்டம் | | 1 |
| தும்மராஷ்டம் | | 1 | தாளிசபத்திரி | | 1 |
| இலவங்கபத்திரி | | 1 | இலவங்கப்பட்டை | | 1 |
| கடுக்காய் | | 1 | நெல்லிக்காய் | | 1 |
| தான்றிக்காய் | | 1 | இலவங்கம் | | 1 |
| எலரிசி | | 1 | சிந்திரமூலம் | | 1 |

பாகதிரவியங்கள்.

| | | | |
|---|---|---|---|
| கரும்புசர்க்கரை | பலம் | 35 | தேன்கொள்ளும்அளவு |

செய்முறை.

மேற்படி சூரணவகைகளை இளவறுப்பாய் வறுத்திடித்து வடித்து அதில் மேற்படி சர்க்கரையைக்கலந்து தேன்விட்டுக் கொஞ்சம் இலகுவாகவே பிசைந்துக்கொள்ளவும்.

சாப்பிடும் வகையும் தீரும் நோயும்.

இதில் மூன்று விரல்கொண்ட அளவு ஒருநாளைக்கு இரண்டு வேளையும் ஒருமண்டலம் வரைக்கும் சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வது நாளில் எள்ளெண்ணெயில் ஸ்நானஞ்செய்தால், இளைப்பு, ஈளை, காசம் சேஷ்மம், உதரவாயு, இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

# ஐந்தாவது அத்தியாயம்.

திப்பிலிரசாயனம்.

சம்பூர்ணம்.



தெய்வமே துணை

# ஆறாவது அத்தியாயம்.

## சௌபாக்கிய சொண்டி.

சுக்குப்பாகப்படுத்தச் சாறுவகை.

| | | | |
|---|---|---|---|
| சுக்கு பலம் | 8 | செம்முள்ளிச்சாறு படி | $\frac{1}{4}$ |
| செந்தரிச்சாறு படி | $\frac{1}{4}$ | முருக்கிலைச்சாறு | $\frac{1}{4}$ |
| கரிசலாங்கண்ணிச்சாறு | $\frac{1}{4}$ | சிறுசெருப்படிச்சாறு | $\frac{1}{4}$ |
| காற்றுவாட்டிச்சாறு | $\frac{1}{4}$ | | |

1. சூரணவகை.

| | | | |
|---|---|---|---|
| தக்கோலம் பலம் | 1 | வால்முளைஅரிசி பலம் | 1 |
| கூகைநீறு | 1 | கருங்குங்குலியம் | 1 |
| வாய்விளங்கம் | 1 | தான்றிக்காய் | 1 |
| நெல்லிக்காய் | 1 | சிறுதிப்பிலி | 1 |
| திப்பிலிக்கட்டை | 1 | | |

2. சூரணவகை.

| | | | |
|---|---|---|---|
| முக்கராகிழங்கு பலம் | 2 | பொன்முசுட்டைவேர் பலம் | 2 |
| கண்டங்கத்தரிவேர் | 2 | நன்னாரிவேர் | 2 |
| நிலப்பனங்கிழங்கு | 2 | | |

பாகதிரவியங்கள்.

| | | | |
|---|---|---|---|
| கருப்புசர்க்கரை பலம் | 27 | பசுவின்பால் படி | 2 |

செய்முறை.

மேற்படி சுக்கை மேல்தோல்சீவி சிறு மொச்சையளவாகத் துண்டுசெய்து ஒரு புதுச்சட்டியில் போட்டு மேற்படிச் சாறுகளை ஒவ்வொன்றாக அந்தச் சுக்கில் விட்டுவிட்டு உலர்த்தி அதை இடித்து வடிகட்டி வேறேவைத்துக்கொண்டு முதற்சூரணவகையையும் இரண்டாவது சூரணவகையையும் தனித்தனி இளவறுப்பாய் வறுத்திடித்து வடிகட்டி மூன்று சூரணங்களையும் ஒன்றாகக்கலந்து மேற்படி சர்க்கரையைப் பசுவின்பாலிற்கரைத்து வடிகட்டி அடுப்பேற்

மிக சர்க்கரைப் பாகுவருஞ் சமயத்தில் மேற்படி சூரணத்தைக்கொட்டி நீர் சுண்டி வறளும்படி கிண்டிப் பொடியாக்கி வேறுபுதுக்கலசத்தில்வைத்துக்கொள்ளவும்.

சாப்பிடும் வகையும் தீரும்ரோயும்.

இதில் மூன்று விரல்கொண்ட அளவு ஒருநாளைக்கிரண்டுவேளையும ஒருமண்டலமவரைக்கும சாப்பிட்டு 2-நாள்விட்டு 3-வது நாள் எண்ணெயில ஸ்நானஞ்செய்தால், கிராணி, பிரமேகங்கள், சூசிகாவாயு, வாதம, பித்தம, அந்திரமுஷ்டிவாயு, மேகவாயு, வாதசூலை, அக்கினிமந்தம, வாயூறல், வாய்சகப்பு, வயிற்றிலுண்டாகும பலவியாதிகள் இவைகள் தீரும், பத்தியம் புளி, கைப்பு, புகை, பெணபோகம நீககவும்.

# ஆறாவது அத்தியாயம்.

சௌபாக்கிய சொண்டி.

சமபூரணம்

---

# ஏழாவது அத்தியாயம்.

## கிருதவர்க்கம்.

### 1. பொன்னுங்காணிசிருதம்.

சாறுவகை.

| | | | | |
|---|---|---|---|---|
| பொன்னுங்காணிசசாறு படி | ½ | கரிசலாங்கண்ணிசசாறு | படி | ½ |
| எலுமிசசம பழசசாறு | ½ | பசுநெய | ,, விசை | ½ |
| பசும்பால் | ½ | அதிமதுரம | பலம | 1 |

செய்முறை.

மேற்படி அதிமதுரததை பசுவின் பாலால் நன்றுயரைத்து நெயயிற்கலந்து பிறகு சாறு, நெய், பால் எல்லாவற்றையும ஒன்றுக் கலந்து அடுப்பேற்றக் குழமபு பாகமாயெரித்து ஒருபாத்திரததில்.

| | | | |
|---|---|---|---|
| சாதிககாய் வராகனெடை | 1 | சாதிபத்திரி வராகனெடை | 1 |
| கோரோசனம | 1 | சிறுகற்கண்டு | 1 |

இவைகளைப் பொடித்துப் போட்டு அந்தப் பாத்திரத்தில் வடித்துக் கிளறிவைத்துக் கொள்ளவேண்டும்.

சாப்பிடும்வகையும், தீருநோயும் பத்தியமும்.

இதில் காலை மாலை ஒரு சிறுகரண்டி வீதம் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் மூலச்சூடு, கைகால், எரிச்சல், கண் எரிச்சல், வயிற்றெரிச்சல் வாய்நாற்றம், வெள்ளை, இவைகள் தீரும். பத்தியம் பசுந்தயிர், பசுமோர், இறைச்சி, சூப்பு இவைகளை அதிகமாச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

2. வல்லாரைக்கிருதம்.

சாறுவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வல்லாரை இலைசசாறு | படி | ½ | பொன்னாங்காணிச்சாறு | படி | ½ |
| பொடுதலைச்சாறு | | ¼ | எலுமிச்சப்பழச்சாறு | | |
| பசுநெய் | வீசை | 1 | பசும்பால் | படி | 1 |

கற்கவகை.

| | | | |
|---|---|---|---|
| சாதிக்காய் வராகனெடை | 1 | சாதிபத்திரி வராகனெடை | 1 |
| மாசிக்காய் | 1 | சிறுநாகப்பூ | 1 |
| காட்டாத்திப்பூ | 1 | வால்மிளகு | 1 |
| ஏலரிசி | 1 | இலவங்கம | 1 |
| அதிமதுரம் | 1 | | |

செய்முறை.

முன்னைக் கற்கவகைகளை யெல்லாம் பசும்பாலால் அரைத்துக் கலந்து பின்னர் எல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி மெழுகுப்பதமா யெரித்து வடித்துக்கொண்டு பிறகு (2) பலம் சீனி கற்கண்டை பொடித்துப்போட்டுக் கலந்து வைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் வகையும் தீரும்நோயும் பத்தியமும்.

இதில்காலைமாலைசிறுகரண்டிவீதம் 1-மண்டலம்வரைக்கும்சாப்பிட்டுககொண்டு வந்தால்,மேகம்,ரணம், கிரந்தி, வெள்ளை, இவைகளும், இத்துடன், செவ்வையாய் முடித்தரசபஸ்பம் கலந்து சாப்பிட்டால் மேகசூலை, குஷ்டம், யோனிப்புற்று, நீரடைப்பு, இவைகளும், தீரும் பத்தியம் கடுகு, நல்லெண்ணெய் முதலியவைகளை நீக்கி, நல்ல போஜனம் சாப்பிடவேண்டும்.

3-கூஷ்மாண்டகிருதம்.

சாறுவகை.

| | | |
|---|---|---|
| கலியாண்பூசிக்காய்ச்சாறு | படி | ½ |
| தாமைவிழுதுசாறு | | ¼ |
| தென்னம்பாளைச்சாறு | | ¼ |
| கற்றாழஞ்சாறு | | ¾ |
| செழ்விளநீர் | | ¾ |
| பசுநெய் | வீசை | ½ |
| பசும்பால் | படி | ½ |

கற்கவகை.

| | | | |
|---|---|---|---|
| சாதிக்காய் வராகனெடை | 1 | சாதிபத்திரி வராகனெடை | 1 |
| கடுக்காய் | 1 | நெல்லிக்காய் | 1 |
| தான்றிக்காய் | 1 | சீரகம் | 1 |
| ஏலரிசி | 1 | வால்மிளகு | 1 |
| காட்டாத்திப்பூ | 1 | கடுக்காய்ப்பூ | 1 |
| கொத்துமல்லி | 1 | குரோசாணி ஓமம் | 1 |

செய்முறை.

முன்னே கற்கவகைகளை யெல்லாம் பசும்பாலால் நன்றாயரைத்து எல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாக எரித்து இறக்கி வடித்து அதில் (2) பலம் சீனுகற்கண்டு பொடித்துப் போட்டுவைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் வகையும் தீருநோயும் பத்தியமும்.

இதில் வேளைக்கு ஒரு சிறுகரண்டி வீதம் காலைமாலை கால்மண்டலம் வரைக்கும் சாப்பிட்டுக்கொண்டு வந்தால், வெள்ளை, தந்துமேகம், உஷ்ணம், கைகால், எரிச்சல், அஸ்திசுரம், அஸ்திரணம், அஸ்திவெட்டை, கிராணி, எலும்புருக்கி, காமாலை, பித்தமயக்கம், மூலச்சூடு இவைகளும், அப்பிரகசெந்தூரம், சேர்த்துச் சாப்பிட்டால் நீரிழிவும் தீரும் பத்தியம் கடுகு, நல்லெண்ணெயிற் சேர்ந்தவைகளை நீக்கி மற்றவைகளையெல்லாம் செவ்வையாகச் சாப்பிடவேண்டும்.

# ஏழாவது அத்தியாயம்.

கிருதவர்க்கம்.

சம்பூர்ணம்.



கடவுள் துணை

# எட்டாவது அத்தியாயம்.

## எண்ணெய் வர்க்கம்.

### 1. கணத்தெண்ணெய்.

சாறுவகை.

| | | |
|---|---|---|
| சிற்றாமணக்கு நெய் | வீசை | 1 |
| கரிசலாங்கண்ணிச்சாறு | பலம் | 5 |
| பொன்னாங்காணிச்சாறு | | 5 |
| கற்றாழஞ்சாறு | | 5 |
| வெ. வெங்காயச்சாறு | | 5 |
| கோவைச்சாறு | | 5 |
| புளியாரைச்சாறு | | 5 |
| கர்ப்பூரவள்ளிச்சாறு | | 5 |
| பசும்பால் | படி | ½ |

கற்கவகை.

| | | | |
|---|---|---|---|
| சாதிக்காய் வராகனெடை | 1 | சாதிபத்திரி வராகனெடை | 1 |
| மாசிக்காய் | 1 | கடுக்காய்ப்பூ | 1 |
| கோஷ்டம் | 1 | அக்கராகாரம் | 1 |
| சீரகம் | 1 | கருஞ்சீரகம் | 1 |
| வெந்தயம் | 1 | இலவங்கப்பத்திரி | 1 |
| இலவங்கப்பட்டை | 1 | வெள்ளைப்பூண்டு | 1 |

செய்முறை.

மேற்படி கற்கவகைகளை யெல்லாம் முன் பசும் பாலாலரைத்துக் கலக்கிச் சாறு எண்ணெய் ஆகிய எல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து அடுப்பிலேற்றி எறித்து கடுகு திரளப்பார்த்து இறக்கிக்கொண்டு கொஞ்சம் ஆறினபின் வடிக்க வேண்டிய பாத்திரத்தில், கொஞ்சம், கோரோசனமும், குங்குமப் பூவும பொடித்துப் போட்டுவடித்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் வகையும் தீருநோயும் பத்தியமும்.

இதில் உச்சிக்கறண்டி விதம் காலையில் மாத்திரம் சாப்பிட்டுக்கொண்டு வந்தால், கணச்சூடு, கணசுரம், கணமாந்தம், சோகி, சிர

ங்கு, ண்ப்பசூடு, இவைகள் தீரும் தேகம் தணியும் பத்தியம் புல மூள்ள பதார்த்தங்களையே சேர்த்துக்கொள்ள வேண்டும்.

## 2. கரப்பான் எண்ணெய்.

கஷாயவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பூவரசு | பலம | 5 | செங்கத்தாரி | பலம் | 5 |
| பூதகரப்பன் பட்டை | | 5 | கண்டங்கத்திரி | | 5 |
| நிலாவிரை | | 5 | விளக்கெண்ணெய் | வீசை | ½ |
| வெள்ளாட்டுப்பால்படி | | ½ | | | |

கற்கவகை.

| | | | |
|---|---|---|---|
| மிளகு வராக்னெடை | கவ | கருஞ்சீரகம் வராகனெடை | கவ |
| கார்போகரிசி | கவ | வெள்ளைப்பூண்டு | கவ |
| வசம்பு | கவ | சதகுப்பி | கவ |
| வலம்புரிக்காய் | கவ | பரங்கிச்சக்கை | கவ |

செய்முறை.

மேலேசொன்ன கஷாயவகையில் எண்ணெயையும் பாலையும் நீக்கி மற்றவைகளை யெல்லாம் நருக்கி ஒருசட்டியில போட்டு (12) படி சலம்விட்டு ஒன்றரைப்படியாகக் காய்ச்சியிறக்கி அதில் மேற்படி கற்கவகைகளை மூன் வெள்ளாட்டுப் பாலாலரைத்துக்கொண்டு எண்ணெயிற் கலந்து பிறகு எலலாவற்றையும ஒன்றாய்க் கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்க்காய்சசி வடித்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும வகையும் தீரும் நோயும் பத்தியமும்

இதில உச்சிகக்ரண்டி வீதம் காலையில் மாத்திரம் அரைமண்டலம் வரைக்கும (2) முறைபாகக் கொடுத்தாயானுல் கரப்பன், கிரந்தி (7) வெளிரணத்திற்குத் தடவினுல் அந்தரணம் இவைகள்தீரும். பத்தியம் புளி கசப்பு, உஷ்ணபதார்த்தங்கள் இவைகளை நீக்கவேண்டும்.

## 3-மாந்த எண்ணெய்.

கற்கவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விளக்கெண்ணெய் | படி | 1 | சீக்கராம்பட்டை | பலம் | 1 |
| வெளளருகு | பலம் | 1 | கறிமஞ்சள் | | 1 |
| வெள்ளைப்பூண்டு | | 1 | | | |

செய்முறை.

கற்கவகை நான்கையும் அரைத்து எண்ணெயிற் கலந்து அடுப்பிலேற்றிப் பதமாக்காய்ச்சி வடித்து வைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும்வகையும் தீருநோயும், பத்தியமும்.

இதில் (3) நாளைக்குக் காலையில் மாத்திரம் கொடுத்துக்கொண்டுவந்தால், சகலமானமாந்தங்களும் நீங்கும், பத்தியம் புளி, உப்பு, குறைவாகசசுட்டு, வறுத்துச் சேர்த்துக்கொள்ளவேண்டும.

# எட்டாவது அத்தியாயம்.

எண்ணெய்வர்க்கம்.

சம்பூர்ணம்.

# ஒன்பதாவது அத்தியாயம்.

மாத்திரைவர்க்கம்.

1-சித்தாநந்தவயிரவம்.

சரக்குவிவரம்.

| | | | |
|---|---|---|---|
| மேல்தோல் நீவினசுக்கு பலம் | 1 | வெதுப்பியதிப்பிலி பலம் | 1 |
| வெடிக்கவிட்டமிளகு | 1 | சுத்திசெய்த இலிங்கம் | 1 |
| (சுத்திசெய்த)நாபி | 1 | பொரித்தபெருங்காயம் | 1 |
| (பொரித்த) வெங்காரம் | 1 | | |

செய்முறை.

இந்த ஏழுசரக்குகளில் இலிங்கத்தையும், பெருங்காயத்தையும் நீக்கிமற்ற ஐந்து சரக்குகளையும் எலுமிச்சம்பழச்சாற்றால் நன்றாயரைத்துப் பிறகு பெருங்காயத்தையும், அதின் பிறகு இலிங்கத்தையும், சேர்த்து நான்குசாமம் மெழுகுபதமாய் மேற்படி சாற்றாலரைத்துக் குன்றிமணியைப்போல் மாத்திரைதிரட்டி நிழலிலுலர்த்திக்கொண்டு அடியில் வரும் அனுபானப்படி கொடுக்கவும்.

அநுபானமும், தீரும்நோயும் பத்தியமும்.

இஞ்சிசுரசம்செய்து அதில் வெள்ளைப் பூண்டு தயிலமும் முலைப்பாலும், சேர்த்து ஒரு மாத்திரை கொடுத்தால் சந்நியும் மேற்படி அநுபானத்தில் தேன்கூட்டி அதில் ஒருமாத்திரை கொடுத்தால் தோஷமும் தீரும். இதற்குப்பத்தியம் நோயளவைக்கண்டு வைக்கவேண்டும்.

2. இராசாநந்தவயிரவம்.

| | | | |
|---|---|---|---|
| சுத்திஇலிங்கம் வராகனெடை | 4 | பொரித்தவெங்காரம் வராக | 8 |
| சுத்திநாபி | 12 | வெதுப்பியதிப்பிலி | 12 |

செய்முறைகு தீரும் வியாதியும், பத்தியமும.

இந்த நான்கு சரக்குகளில இலிங்கத்தைத் தள்ளிமற்ற மூன்றையும் முன்னர் இஞ்சிசாற்றாலரைத்து பிறகு இலிங்கத்தைச் சேர்த்து மேற்படி சாற்றால் நான்கு சாமமரைத்து மிளகுபோல் மாத்திரை திரட்டி நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு சந்நிகளுக்கெல்லாம் நோய் நிதானத்திற்குத் தகுந்த அநுபானத்தில் ஒருமாத்திரைகொடுக்கவேண்டும் இச்சாபத்தியம்.

3-வாதராட்சசன்.

இரசம், சாரகம், காந்தம், அப்பிரகபற்பம் தாமிரபற்பம் இவைகள் சமனெடை.

செய்முறையும் தீரும்வியாதியும் பத்தியமும்.

இந்த ஐந்து சரக்குகளில் இரசத்தையும் காந்தத்தையும் நீக்கி மற்றவைகளை நன்றாய் கலக்கப்பார்த்துக்கொண்டு பின்னர் அவ்விரண்டையும் சேர்த்து உறவாக்கி வெள்ளைச்சாட்டரணையின் சாற்றினால் நான்கு சாமமும், சீந்திற்கொடிக் கஷாயத்தால் இரண்டு சாமமும், துளசிச்சாற்றால் இரண்டு சாமமும், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், இம்மூன்றும், சேர்த்துக்காய்ச்சிய கஷாயத்தால் இரண்டு சாமமுமரைத்து மொத்தையாயுருட்டி மேற்படி இலையை அந்த மொத்தை கொள்ளும் அளவுக்கரைத்து அந்த மொத்தையை அரைத்த இலைக்குள்வைத்து நன்றாய் மூடி மேலேவைத்த இலைகருகும்படி புடம்போட்டு ஆறினபின் எடுத்து அந்த உண்டை முழுமைக்கும் சித்திரமூலக் கஷாயத்தால் நான்கு சாமமரைத்து மும

மூன்று வராகனெடைக்கு கட்டுமாத்திரை செய்து வைத்துக்கொண்டு, சந்நி, தோஷம், வாயு, இவைகளுக்கு அநுபானமறிந்து கொடுக்கவேண்டும பத்தியம் சுட்டபுளி.

## 4. சுயமக்கினி.

| | | | |
|---|---|---|---|
| இரசம் வராகனெடை | 3 | கந்தகம் வராகனெடை | 2 |
| காந்தசெந்தூரம் | 4 | மனோசிலை | 2 |
| இலிங்கம் | 2 | எழுகுபொடி | 1 |

### செய்முறை.

இந்த ஆறு சரக்குகளையும் ஒன்றாகச் சேர்த்து கற்றாழஞ்சாற்றால் நாளுக்கொருசாமவீதம் 15-நாள் அரைத்து கட்டுமாத்திரை திரட்டி வைத்துக்கொண்டு அடியில்வரும அநுபானப்படி கொடுக்கவும்.

### அநுபானமும், தீரும்வியாதியும்.

சுக்கு, திப்பிலி, மிளகு, இம்மூன்றையும், சமமாக எடுத்து இளவறப்பாய் வறுத்துச் சூரணஞ்செய்து அதில் தேன்விட்டு மேற்படி கட்டில் பணவெடைசேர்த்து அரைமண்டலம் சாப்பிட்டால், அக்கினிமந்தம், பீலிகை, குன்மவாயு, கவிகை, பாண்டு, சுரம், இவைகள் தீரும்.

### பத்தியம்.

சுட்டபுளி, வறுத்த உப்பு, சேர்த்துக்கொள்ளவும்.

## 5. வேறுவித சுயமக்கினி.

| | | | |
|---|---|---|---|
| இரசம் வராகனெடை | 1 | கந்தகம் வராகனெடை | 2 |
| அயப்பொடி | 4 | | |

### செய்முறை.

இம்மூன்று சரக்குகளையும் முன்போலவே யரைத்து மாத்திரைகட்டி ஒரு சீலையிற்சுற்றி நெற்பாண்டத்தில் ஒருபட்சம்வைத்து எடுத்து முன்போலே ஒருமண்டலம் சாப்பிட்டால் முன்சொன்ன வியாதிகள் நீங்கும்.

### வேறு அநுபானமும், தீரும்நோயும்.

சுரங்களுக்குமாத்திரம், பச்சை இஞ்சிரசத்தில் தேன்கூட்டி அதில் கொடுக்கவேண்டும். பத்தியம் முன்னதுபோலவே வைக்கவேண்டும்.

### 6. கபாடமாத்திரை.

சாதிக்காய், சாதிபத்திரி, பெருங்காயம், சீரகம், அதிவிடயம், இலவங்கம், அபினி, இலிங்கம், வெங்காரம், கழற்சிப்பருப்பு, குரோசாணி ஓமம சமனெடை.

செய்முறை.

சாதிக்காயை சாதத்திலிட்டு வேகவைத்து பெருங்காயத்தைப் பொரித்து, அபினி, இலிங்கம, தவிர மற்றவைகளை வறுத்துப்பிறகு எல்லாவற்றையும் ஒன்றாய்ச்சேர்த்துக் கஞ்சாச் சாற்றாலாவது, கஞ்சாக் கஷாயத்தாலாவது நான்கு சாமமரைத்து இலந்தை விதைப்பிரமாணம மாத்திரைசெய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு அடியில்வரும் அநுபானப்படி கொடுக்கவும்.

அநுபானமும் தீரும்வியாதியும்.

இதில் ஒருமாத்திரையை எருமைத் தயிரில் மூன்றுநாளும், தேனில் 3-நாளும், வாழைப்பூச்சாற்றில் 3-நாளும கொடுத்தால், இரத்தமூலம், சீமூலம் இவைகளும் எட்டுவகைக்கிராணிகளும் அதிசாரக்கடுப்புந்தீரும் புளிசேர்த்துப் பத்தியம் செய்யவேண்டும்.

### 7. பூபதிகுளிகை.

தங்கம், வெள்ளி, துத்தநாகம், அயப்பொடி, முத்து, இரத்தினம், இரசம், கந்தகம், இலிங்கம், மனோசிலை, மிருதார்சிங்கி, நாபி, இவைகள் சக்திக்குத் தக்கபடி சமனெடை.

செய்முறை.

மேலேசொன்ன பன்னிரண்டு சரக்குகளையும் ஒன்றாகச் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றில் நான்குசாமமரைத்துப் பில்லைசெய்துலர்த்தி அகலில்வைத்து மேலும் அகல்மூடிச் சீலை (3) செய்து 50-வறட்டியில் புடமிட்டால் ஒருவகையான ஊதாநிறமாய்ச் செவந்துநிற்கும் அதைப்புடம் நன்றாயாறினபிறகு எடுத்து எடைபோட்டு அந்தப் பில்லைஉள்ள எடைக்கு இலிங்கஞ்சேர்த்து முலைப்பாலால் நான்கு சாமம் அரைத்துக் கட்டுமாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு அடியில்வரும் அநுபானப்படி கொடுக்கவேண்டும்.

அநுபானமும் தீரும்வியாதியும்.

முலைப்பாலில் ஒரு அரிசியெடை இழைத்துகொடுத்தால், திரிதோஷங்களும், ஏழுதோஷங்களும், சிரசில் நிற்கும் தோஷமும், பதின்மூன்று சந்நிகளும் தீரும். இஞ்சிச்சுரசத்தில் தேன்விட்டு அதில் ஒரு அரிசியெடைகொடுத்தால் சாகிறதருணத்திலிருக்கிற பிராணனும், கொஞ்சம் பேசிச்சாகும். இச்சாபத்தியம்.

## 8. இரசசிந்தாமணி.

இரசம், இரத்தினம், தங்கம், வெள்ளி, முத்து, பவழம், இலிங்கம், மனோசிலை, கந்தகம், அப்பிரகம் சமனெடை.

செய்முறை.

இந்தச் சரக்குகளை யெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து முலைபாலால் நான்குசாமமும், சித்திரமூலக் கஷாயத்தால் நான்குசாமமும், எருக்கம்பாலால் இரண்டு சாமமுமாகவரைத்து பலகறைகள்கொண்டுவந்து துளைத்து அவைகளில் மேற்படி அரைத்த மருந்தை அடைத்துவைத்துக்கொண்டு சித்திரமூலத்தைக் கொளுத்திச் சாம்பலாக்கி அந்தச்சாம்பலை மண்சீலையில் பரப்பி அதின்மேரில் மேற்படிமருந்து அடைத்து வைத்திருக்கும் பலகறைகளை வைத்து மேலும் சாம்பல் கொட்டிச் சுற்றிக்கட்டி அதற்குமேல் இரண்டு மண்சீலை செய்து வெயிலிலுலர்த்தி 100-வரிட்டியில் புடம் போட்டெடுத்து பலகறையோடு அது இருக்கும் எடைக்கெடை இரசமும், நாபி மூக்காற் கழுஞ்சும் சேர்த்து, திரிகடுகு, கஷாயத்தால் 4-சாமமும், திரிபலைக் கஷாயத்தால் 2-சாமமும், எருக்கம்பட்டைச் சாற்றால் ஒரு சாமமும் அரைத்துக் கட்டு மாத்திரையாச்செய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு அடியில் வரும் அநுபானப்படி கொடுக்கவேண்டும்.

அநுபானமும் தீரும் வியாதியும்.

முலைப்பாலில் குன்றிமணி யெடைகொடுத்தால் பதிமூன்று சந்நிகளும் அவைகளால் வரும சத்ததோஷங்களும் தீரும் இச்சாபத்தியம்.

## 9. கோரோசனக் குளிகை.

கோரோசனம், குங்குமப்பூ, ரசகர்ப்பூரம், இரசசெந்தூரம் பச்சைக் கர்ப்பூரம், ஏலரிசி, அப்பிரக செந்தூரம், இலவங்கம், கோஷ்டம், சாதிக்காய், அக்கார காரம், சுக்கிக்குத் தக்கபடி சமனெடை.

செய்முறை.

பச்சைக்கர்ப்பூரம், குங்குமப்பூ கோரோசனம், இவைகள் தவிர மற்றவைகளைக் கல்வத்திலிட்டுப் பொடிசெய்து சந்தனதூள் கஷாயத்தால் நான்கு சாமமும், சண்பகப்பூக கஷாயத்தால் இரண்டு சாமமும, குங்குமப்பூ கஷாயத்தால் இரண்டு சாமமு மரைத்து மெழுகு பதமாகுந்தருணத்தில் மேற்படி மூன்று சரக்குகளையுஞ் சேர்த்து நன்றாய்க் கலக்கப் பார்த்துக்கொண்டு குன்றிமணிப் பிரமாணம்வரும அநுபானப்படி கொடுக்கவும்.

அநுபானமும், தீரும் வியாதியும்.

ஒரு மாத்திரை முலைப்பாலிலிழைத்துக் கொடுத்தால் தொண்ணூற்றாறு சேஷ்மங்களும், பதின்மூனறு சந்நிகளும், மண்டையிடிப்பும், நீர்த்தோஷமும், மயக்கமும், சேஷ்மசுரமும, வலியும், இசிவும் தீரும இச்சாபத்தியம்.

10. பூமணிகுளிகை.

| | | | |
|---|---|---|---|
| கடகரோகணி | பலம் ½ | பச்சைஇலுப்பப்பூ | பலம் |
| சுத்திசெய்த வாளம் | 1 | | |

செய்முறை.

கடகரோகணியையும் இலுப்பைப்பூவையும் முன்னா கற்றழைசாற்றால் நன்றாய் மைய அரைத்துப் பின்னா வாளத்தைச்சேர்த்து மேற்படி சாற்றினாலேயே நான்கு சாமம் வரைக்கும் நன்றாயரைத்து, தூதுளங்காய்ப் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி அடியில் வரும அநுபானப்படி கொடுக்கவும.

அநுபானமும், தீரும் வியாதியும்.

இஞ்சிசுரசத்தில் தேன்விட்டு அதில் ஒரு மாத்திரைகொடுத்தால் சன்னி சுரங்களும, விஷசுரங்களும, வெள்ளைப்பூண்டு தயிலத்தில் ஒருமாத்திரை கொடுத்தால் சத்திதோஷங்களும், சிற்றாமணக்கெண்ணெயில் ஒரு மாத்திரை கொடுத்தால் வாயுவைப்பற்றியவியாதிகளும் தீரும் பத்தியம் புளிநீக்கவும்.

## 11. அர்த்தநாரீஸ்வரம்.

### இதுமாத்திரைப்பொடி

இரசம், நாபி, கந்தகம், பொரித்த வெங்காரம் சமனெடை.

### செய்முறை,

இந்நான்கு சரக்குகளையும் ஒன்றாய்ச் சேர்த்து நொச்சிலிலைச்சாற்றினால் இரண்டு சாமமரைத்து மொத்தையாக்கி ஒரு சிறுகுடுவையிற்போட்டு மேலோடுமூடி மண்சீலைசெய்து வைத்துக்கொண்டு ஒரு பெரியசட்டியில் குடுவைபாதி மறையும்படி உப்பைக்கொட்டி அதினடுவில் குடுவையைவைத்து மேலும் உப்பைக்கொட்டி மறைத்து அதற்குமேல் ஒருசட்டிமூடிச் சீலைமண்செய்து அடுப்பின்மேல் வைத்துக் கமலாக்னியாக நான்குசாமமெரித்து ஆறவிட்டுப் பிறகு எடுத்து செங்கழுநீர்ப்பூசாற்றால் 4-சாமமும் நொச்சிலைச்சாற்றால் நான்குசாமமும், பாகலிலைச்சாற்றால் 4-சாமமுமரைத்து வெயிலிலுலர்த்திப் பொடியாக்கி வைத்துக்கொண்டு அடியில்வரும் அநுபானப்படியே கொடுக்கவும்.

### அநுபானமும், தீரும்வியாதியும்.

இந்தத் தூளில் ஒருபணவெடையெடுத்து முன்னே சாறுகளில் செங்கழுநீர்ப்பூச்சாற்றில் கொடுத்தால் வாதசுரமும், நோச்சிற்சாற்றிற்கொடுத்தால் பித்தசுரமும், பாகற்சாற்றிற்கொடுத்தால் சிலேஷ்ம சுரமும், முன்னேசொன்ன சாறுகளில் ஒருமூக்கில் நசியஞ்செய்தால் ஒருபக்கசுரமும், மற்றொருமூக்கில் நசியஞ்செய்தால் மற்றொருபக்கசுரமும், தீரும் பத்தியம் ஆட்டுப்பாலிற் கஞ்சிகாய்ச்சிகொடுக்கவும்..

## 12. சலோதாரிமணி.

பொரித்தவெங்காரம், சுக்கு, திப்பிலி, மிளகு, கடல்நுரை, சூரைவித்து, இந்துப்பு, பெருங்காயம் வகைக்கொருபலம் நேர்வாளம் பலம் 2.

### செய்முறை.

மேற்சொன்ன (9) சரக்குகளையும் ஒன்றாய்ச்சேர்த்து இளநீரால் ஒருசாமமரைத்து இலந்தைவிரைப்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு அடியில்வரும் அநுபானப்படி கொடுக்கவும்.

அநுபானமும் தீரும வியாதியும்.

இஞ்சிசுரசத்தில் தேன்விட்டு ஒருமாத்திரைகொடுத்தால், வாதபித்தங்களும், தேனில் கொடுத்தால், மாந்தம், உப்பிசம், நீரடைப்பு, இவைகளும் தீரும் இச்சாபத்தியம்.

## ஒன்பதாவது அத்தியாயம்.

மாத்திரைவர்க்கம்.

சம்பூர்ணம்.

---

## பத்தாவது அத்தியாயம்.

ஆக்கிராணநசியவர்க்கம்.

---

| | | | |
|---|---|---|---|
| சுண்டைச்செடிவேர் | பலம் $\frac{1}{2}$ | தும்பைச்செடிவேர் | பலம் $\frac{1}{2}$ |
| சுட்டஇலுப்பைக்கட்டி | $\frac{1}{4}$ | | |

செய்முறை.

முன்வேர் இரண்டையும் நன்றாய் வெயிலிலுலர்த்தி இலுப்பைக்கட்டியைச்சுட்டுப்போட்டு மூன்றையும் நன்றாயிடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொள்ளவேண்டும்.

உபயோகிக்கும் விதமும், தீருநோயும்.

இதில் ஒருசிட்டிகையெடுத்து மூக்குத்தூள் போட்டுக்கொள்வதுபோல் போட்டுக்கொண்டால் சிரசில்தங்கும் எப்படிப்பட்டநோயும் நீங்கும் இதற்குபத்தியமில்லை.

## பத்தாவது அத்தியாயம்.

ஆக்கிராணநசியவர்க்கம்.

சம்பூர்ணம்.

---

உ

தெய்வமே துணை

# பதினொன்றாவது அத்தியாயம்.

## கண்டேஷவர்க்கம்.

மகாகண்டேஷம்.

| | | | |
|---|---|---|---|
| தமகம வராகனெடை | ½ | வெள்ளி வராகனெடை | ½ |
| முத்து | ½ | அதிமதுரம் | ½ |
| இலவங்கம் | ½ | சிறுதிப்பிலி | ½ |
| பவளம் | ½ | உருத்திராட்சம் | ½ |
| கோஷ்டம் | ½ | ஓமம் | ½ |
| வில்வவேர் | ½ | மான்கொம்பு | ½ |
| இரசசெந்தூரம் | ½ | ஆடாதோடைவேர் | ½ |

செய்முறை.

இவைகளையெல்லாம் முலைப்பால்விட்டு மெழுகுபதமாயரைத்து உருட்டி வைத்துக்கொள்ளவேண்டும்.

உபயோகிக்கும்விதமும், தீரும்நோயும்.

இதைத் தேனிலிழைத்துச் சாப்பிட்டால், தோஷம், சந்நி, நாவறட்சி, வாந்தி, விக்கல், வாயு, நாக்கில் முள்ளுமுள்ளா யிருததல் ஆகிய இவைகள்நீங்கும். பத்தியம் குளிர்ச்சியானபதார்த்தங்கள் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

பதினொன்றாவது அத்தியாயம்.

கண்டேஷவர்க்கம்.

சம்பூர்ணம்.



கடவுள் துணை.

# பன்னிரண்டாவது அத்தியாயம்.

## கலிக்கவர்க்கம்.

### வீரபத்திரக்கலிக்கம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | வராகனெடை | 1/4 | திப்பிலி | வராகனெடை | 1/4 |
| மிளகு | | 1/4 | கடுக்காய்த்தோல் | | 1/4 |
| இந்துப்பு | | 1/4 | இலவங்கம் | | 1/4. |
| சுத்திசெய்தநேர்வாளம் | | 1/4 | | | |

செய்முறை.

இவைகளையெல்லாம் வெந்தயச்செடி சமூலம்இடித்து அந்தச் சாற்றால் மெழுகுபதமாயரைத்து மாத்திரைதிரட்டி வைத்துக்கொள்ளவேண்டும்.

உபயோகிக்கும்வகையும், தீரும்நோயும், பத்தியமும்.

இதை வெந்தயச்சாற்றிலிழைத்துக் கண்ணில்போட்டால், பசாசு, சந்நி, திரிதோஷம் இவைகள் நீங்கும். பத்தியம் இருதயத்திற்குப் பலமுள்ள பதார்த்தங்களையும், உஷ்ணமான பதார்த்தங்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

நேர்வாளசுத்தி.

ஒருபலம் நேர்வாளம் கொண்டுவந்து கொஞ்சநேரம் வெயிலிற் போட்டு உருட்டி ஓட்டை உடைத்துப்போட்டு உள்ளிருக்கும் பருப்பை ஒருகனத்ததுணியில் தளர்ச்சியாகக்கட்டி வைத்துக்கொண்டு வேறொருமண்பாண்டத்தில் எட்டுபலம் எருமைச்சாணியைப் போட்டு அதற்கு எட்டுப்பலம் எருமைமூத்திரமும், அவ்வளவு கரிசலாங்கண்ணிச்சாறும, அவ்வளவு ஆற்றுச்சலமும்விட்டுக் கரைத்து அதில் யேறபடி மூட்டையைப்போட்டு அடுப்பில்வைத்து நன்றாய் வேகும்படி எரித்து அந்த ஆவிமுகத்தில் படாதபடி இறக்கிச்சற்று நேரம ஆறவிட்டு மூட்டையை அவிழ்த்து நல்லசலம்விட்டு நன்றாக்கழுவி அந்தப்பருப்பை இரண்டிரண்டாய் பிளந்து அதின் நடுவிலிருக்கும் இலையைக் கொஞ்சமும் இராதபடி எடுத்துப்போட்டு மறு

படி 7-முறை நல்லசலம்விட்டு நன்றாய்க்கழுவி நிழலிலுலர்த்திப் பிறகு ஒருநாளைக்கெல்லாம் எலுமிச்சஞ்சாற்றில் ஊறவிட்டுப் பிறகு 3-துளி விளக்கெண்ணெய் ஒருசட்டியிலிட்டு அடுப்பேற்றி மேற்படி ஊறவைத்து உலர்த்திய வாளத்தைச் சட்டியிலிட்டுச் சிறுகவறுத்து வைத்துக்கொள்ளவேண்டும். இதுவே மஹாசுத்தி. இப்படி செய்த வாளத்தையே எந்தமருந்திற்கும் சேர்த்துக்கொள்ளலாம்.

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

### கலிக்கவர்க்கம்.

சம்பூரணம்.



## பதின்மூன்றாவது அத்தியாயம்.

### தைலவர்க்கம்.

#### 1. அஸ்வகந்தபலாலாக்ஷாதைலம்.

கஷாயவகை.

| | | | |
|---|---|---|---|
| அமுக்கராக்கிழங்கு | பலம் 15 | சிற்றாமுட்டி | பலம் 15 |
| வெள்ளருகு | 4 | நன்னாரிவேர் | 4 |
| சீந்திலகொடி | 4 | விலாமிச்சம்வேர் | 4 |
| கோரைக்கிழங்கு | 4 | நெய்சிட்டிவேர் | 4 |
| அவிரிவேர் | 4 | சாரத்தைவேர் | 4 |
| துளசிவேர் | 4 | வெட்டிவேர் | 4 |
| அகிற்கட்டை | 4 | தேவதாரக்கட்டை | 4 |
| கீழ்வாய்நெல்லிவேர் | 4 | கொம்பரக்கு | 4 |

கற்கவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | ½ | திப்பிலி | பலம் | ½ |
| மிளகு | | [illegible] | கடுக்காய் | | ½ |
| நெல்லிக்காய் | | ½ | தான்றிக்காய் | | ½ |
| கஸ்தூரிமஞ்சள் | | ½ | அதிமதுரம் | | [illegible] |
| கோஷ்டம் | | ½ | சடாமாஞ்சில் | | [illegible] |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீரகம் | பலம் | ½ | கருஞ்சீரகம் | பலம் | ½ |
| காட்டுச்சீரகம் | | ½ | பூஞ்சாந்து | | ½ |
| சந்தனத்தூள் | | ¼ | மரமஞ்கள் | | ½ |
| கடகரோகணி | | ½ | செவ்வள்ளிக்கொடி | | ½ |
| பச்சிலே | | ½ | கிச்சிலிக்கிழங்கு | | ½ |
| கிளியூறல்பட்டை | | ½ | சதகுப்பி | | ½ |
| இலவங்கப்பட்டை | | ½ | ஏலரிசி | | ½ |

பாகவகை.

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | வீசை | 1 |
| தயிர்ச்சலம் | படி | ½ |
| பசும்பால் | படி | 1 |

செய்முறை.

மேலேசொன்ன கஷாயவகை பதினோரில் கொம்பரக்கை நீக்கி மற்றையபதினொன்கு சரக்குகளேயும் நையநன்ருயிடித்து ஒருபெரிய பாண்டத்தில்போட்டு 24-படி சலமவிட்டு 1½-படியாகச் சுண்டக்காய்ச்சி வேறேவைத்துக்கொள்ளவேண்டும். பிறகு கொம்பரக்கை வேறொருபாத்திரத்தில் நருக்கிப்போட்டு 8-படிசலம்விட்டு அடுப்பேற்றி 1-படியாக சுண்டக்காய்ச்சி வேறேவைத்துக்கொள்ளவேண்டும்.

அதின்பிறகு கற்கவ்கைகளேயெல்லாம் மேற்படி பசும்பால்விட்டுநன்ருயரைத்துவழித்து முன் எண்ணெயிற்கலந்து பிறகுஒன்றரைப்படியாகக்காய்ச்சி கஷாயத்தையும் தயிர்ச்சலத்தையுமவிட்டு நன்ருய்க்கலந்து அடுப்பேற்றி ஒரேசாதிவிறகால்எரிக்கவேண்டும் அப்பொழுது முதலில்கொதிவரும்போது மேற்படி அரக்குக்கஷாயத்தையும் கூடச்சேர்த்துமுதிராதபதத்தில் வடிகட்டிவைத்துககொண்டுகனேசனேப்பூசைசெய்யவேண்டும்

ஸ்நானஞ்செய்யும் வகையும் தீருநோயும்,

பத்தியமும்.

இதினல் வாரத்திற் கிருமுறைஸ்நானஞ் செய்துகொண்டுவந்தால் மேகசூலே, வாதசுரம, பித்தசுரம், மயக்கம், சிலேஷ்மசுரம, சுவாசகாசம், கண்ணெரிச்சல், இவைகள்தீரும். பத்தியம்புளிப்பு, புகை பெண்போகம் இவைகளேநீக்கவேண்டும்.

## 2. வில்வாதிதயிலம்.

கஷாயவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வில்வவேர் | பலம் | 8 | விலாமிச்சவேர் | பலம் | 8 |
| கோரைக்கிழங்கு | | 8 | சீந்தில்கொடி | | 8 |
| கீழ்வாய்நெல்லி | | 8 | கொம்பரக்கு | | 16 |

கற்கவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | மரமஞ்சள் | பலம் | 1 |
| திப்பிலி | | 1 | சந்தனத்தூள் | | 1 |
| மிளகு | | 1 | கிளியூறல்பட்டை | | 1 |
| கடுக்காய் | | 1 | பூஞ்சாந்து | | 1 |
| நெல்லிக்காய் | | 1 | செவ்வள்ளிக்கொடி | | 1 |
| தான்றிக்காய் | | 1 | இலவங்கப்பட்டை | | 1 |
| கஸ்தூரிமஞ்சள் | | 1 | பச்சிலை | | 1 |
| அதிமதுரம் | | 1 | கிச்சிலிக்கிழங்கு | | 1 |
| கோஷ்டம் | | 1 | ஏலரிசி | | 1 |
| சீரகம் | | 1 | கருஞ்சீரகம் | | 1 |
| சடாமாஞ்சில் | | 1 | | | |

பாகவகை.

| | | |
|---|---|---|
| நெல்லெண்ணெய் | வீசை | 1 |
| பசும்பால் | படி | 1 |

செய்முறை.

மேலேசொன்ன கஷாயவகைகளில் கொம்பரக்கைநீக்கி மற்ற வைகளை நையநருக்கி ஒருமண்பாண்டத்திற்போட்டு 24-படி சலம் விட்டு ஒன்றரைபடியாகச் சுண்டக்காய்ச்சி வேறேவைத்துக்கொள்ள வேண்டும் பிறகு கொம்பரக்கைநருக்கி வேறுபாண்டத்திற் போட்டு 8-படிசலம்விட்டு ஒருபடியாகச் சுண்டக்காய்ச்சிவடித்து வேறேவை த்துக்கொள்ளவேண்டும். அதின்பிறகு மேற்படி கற்கவகைகளை யெ ல்லாம் முன்பசும்பாலால் நன்றாயரைத்து எண்ணெயிற்கலந்து அத் துடன் ஒன்றரைபடி கஷாயத்தைச்சேர்த்து அடுப்பேற்றிச்சிறுதீயா ய்எரிக்கவேண்டும் அப்படிஎரிக்கும்போது வருநின்றமுதற்கொதிக்கு மேற்படி அரக்குக்கஷாயத்தையுங் கலந்து மெழுகுபதத்தில் வடி கட்டிவைத்துக்கொள்ளவேண்டும்..

ஸ்நானஞ்செய்யும் வகையும், தீருநோயும்,

பத்தியமும்.

இதில் வாரத்திற் கிருமுறை ஸ்நானஞ்செய்து கொண்டுவந்தால் சிரிழிவு, பித்தம் குன்மம், மண்டைஇடி, மேகவறட்சி, இவைகள் தீரும். பத்தியம் புளி, புகை, பெண்போகம், இவைகளை நீக்கவும்.

3. குமரித்தயிலம்.

சாறுவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கற்றாழஞ்சாறு | படி | 2 | பசும்பால் | படி | 2 |
| நல்லெண்ணெய் | | 2 | | | |

கற்கவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | ½ | ஏலரிசி | பலம் | ½ |
| திப்பிலி | | ½ | பச்சிலை | | ½ |
| மிளகு | | ½ | கிச்சிலிக்கிழங்கு | | ½ |
| கோஷ்டம் | | ½ | இலவங்கப்பத்திரி | | ½ |
| சடாமாஞ்சில் | | ½ | இலவங்கப்பட்டை | | ½ |
| கடுக்காய் | | ½ | செவ்வள்ளிக்கொடி | | ½ |
| நெல்லிக்காய் | | ½ | அக்கராகாரம் | | ½ |
| தான்றிக்காய் | | ½ | கஸ்தூரிமஞ்சள் | | ½ |
| சீரகம் | | ½ | இலவங்கம் | | ½ |
| அதிமதுரம் | | ½ | சந்தனத்தூள் | | ½ |
| பூஞ்சாந்து | | ½ | கடுகரோகணி | | ½ |
| சண்பகப்பூ | | ½ | சோம்பு | | ½ |
| யானைத்திப்பிலி | | ½ | மரமஞ்சள் | | ½ |
| மஞ்சிஷ்டி | | ½ | | | |

செய்முறை.

மேலே சொன்ன கற்கவகைகளையெல்லாம்பசும்பாலாலரைத்து எண்ணெயையும், சாற்றையுங்கலந்து அதிற்கரைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து முதிராதபதத்தில் வடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

ஸ்நானஞ்செய்யும் வகையும், தீரும்நோயும்,

பத்தியமும்.

இதில் வாரத்திற்கு 2-முறை ஒரு மண்டலம் வரைக்கும் ஸ்நானஞ்செய்து கொண்டுவந்தால், அஸ்திசுரம், அஸ்திவெட்டை, பித்தம், ஊறல், வறட்சி குன்மம் பாண்டு இவைகள தீரும் பத்தியம் புளி, புகை, பெண் போகம் இவைகளை நீக்கவேண்டும்.

4. கொம்பரக்குத்தயிலம்.

கஷாயவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொம்பரக்கு | பலம் | 8 | நல்லெண்ணெய் | வீசை | 1 |
| தயிர்ச்சலம் | | 16 | பசும்பால் | படி | 1 |
| பழங்காடி | | 16 | | | |

கற்கவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சத்குப்பி | பலம் | ¼ | பச்சிலை | பலம் | ¼ |
| கடகரோகணி | | ¼ | கிச்சிலிககிழங்கு | | ¼ |
| கிளியூற்ல்பட்டை | | ¼ | செவ்வள்ளிக்கொடி | | ¼ |
| பூஞ்சாந்து | | ¼ | இலவங்கப்பத்திரி | | ¼ |
| இலவங்கப்பட்டை | | ¼ | சந்தனத்தூள் | | ¼ |
| சடாமாஞ்சி | | ¼ | சீரகம் | | ¼ |
| கோஷ்டம் | | ¼ | கருஞ்சீரகம் | | ¼ |
| கஸ்தூரிமஞ்கள் | | ¼ | மெருகன்கிழங்கு | | ¼ |
| அதிமதுரம் | | ¼ | ஏலரிசி | | ¼ |

செய்முறை.

மேலே சொன்ன கொம்பரக்கை நருக்கி ஒரு பாண்டத்திற்போட்டு (8) படி சலம்விட்டு (1) படி யாகக்காய்ச்சி வடிகட்டிக்கொண்டு அதில் பாலை நீக்கி மற்றவைகளையெல்லாம் விட்டுக்கலந்து, அதின் பிறகு மேற்படி கற்கவகைகளைப் பாலாலரைத்து அந்த எண்ணெயிற் கலக்கி அடுப்பேற்றி முதிராதபதத்தில் வடித்து இறுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

ஸ்நானஞ்செய்யும் வகையும் தீரும்வியாதியும்,

பத்தியமும்.

இதில் வாரத்திற்கு (3) முறை ஒரு மண்டலம் வரைக்கும் ஸ்நானஞ்செய்து கொண்டுவந்தால் பித்த வெட்டை, அஸ்திசுரம், தலைமயக்கம், ஊறல், சீதளசுரம், பாண்டு, சூலை, கற்றாழைநாற்றம் இவைகள் தீரும். பத்தியம் புளி, புகையிலை, பெண்போகம், வெயில் இவைகளை நீக்கவேண்டும்.

## 5. ஆமலகத்தயிலம்.

சாறுவகை.

| | | | | |
|---|---|---|---|---|
| நெல்லிக்காய்ச்சாறு | படி | 2 | பொன்னாங்காணிச்சாறு படி | 2 |
| கற்றாழஞ்சாறு | | 2 | செவ்விளநீர் | 2 |
| சிறுகீரைச்சாறு | | 2 | பசும்பால் | 2 |
| நல்லெண்ணெய் | | 3 | | |

கற்கவகை.

| | | | |
|---|---|---|---|
| அதிமதுரம்பலம்காலேஅரிக்கால் | | இலவங்கப்பத்திரிபலம் கால்லேஅரிக் | |
| கோஷ்டம் | ,, | இலவங்கப்பட்டை | ,, |
| ஏலரிசி | ,, | சுக்கு | ,, |
| குரோசானிஓமம் | ,, | திப்பிலி | ,, |
| பச்சிலை | ,, | மிளகு | ,, |
| கிச்சிலிக்கிழங்கு | ,, | கடுக்காய் | ,, |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | நெல்லிக்காய் | ,, |
| சடாமாஞ்சில் | ,, | தான்றிக்காய் | ,, |
| சாதிபத்திரி | ,, | பூஞ்சாந்து | ,, |
| சாதிக்காய் | ,, | சோம்பு. | ,, |
| வால்மிளகு | ,, | | |

செய்முறை.

மேற்படி சாறு வகைகளையும், எண்ணெயையும் ஒன்றாய்க்கலந்து கொண்டு அதில் மேற்படி பாலால் கற்கவகைகளை யெல்லாம் அரைத்துக்கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து முதிராத பதத்தில் வடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

ஸ்நானஞ்செய்யும் வகையும், தீரும்நோயும்,

பத்தியமும்.

இதில் வாரத்திற்கு (2) முறை ½ மண்டலம் ஸ்நானஞ்செய்து கொண்டுவந்தால், கண்காசம், கண்மறைப்பு, கண்புகைச்சல் முதலிய கண்ணில்வரும் நோய்களும், பித்தவெட்டை, பித்தவாயு, மயக்கம், உடம்பெரிவு, கைகால் எரிச்சல் ஆகிய இவைகளும் நீங்கும் பத்தியம். புளி, புகை, வெய்யில், சிற்றின்பம் இவைகளை நீக்க வேண்டும்.

6 சந்தனாதித்தயிலம்.

கஷாயவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சந்தனத்தூள் | பலம் | 8 | விலாமிச்சம்வேர் | பலம் | 4 |
| வெட்டிவேர் | | 4 | கோரைக்கிழங்கு | | 4 |
| சீந்தில்கொடி | | 4 | சிற்றாமுட்டி | | 4 |
| பேராமுட்டி | | 1 | பேராமல்லி | | 4 |
| சிற்றாமல்லி | | 4 | அமுக்கராங்கிழங்கு | | 4 |
| நன்னாரிவேர் | | 4 | பர்ப்பாடகம் | | 4 |

சாறுவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செவ்விளநீர் | படி | 2 | பொன்னாங்காணிச்சாறு | படி | 2 |
| சிறுகீரைச்சாறு | | 1 | பொடுதலைச்சாறு | | 1 |
| வல்லாரைச்சாறு | | 1 | சிறுசின்னிச்சாறு | | 1 |
| கர்ப்பூரவள்ளிச்சாறு | | 1 | காமைவிழுதுச்சாறு | | 1 |
| நல்லெண்ணெய் | வீசை | 3 | நெய் | வீசை | 1 |
| பசும்பால் | படி | 2 | தயிர்ச்சலம் | படி | 2 |

கற்கவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | ½ | பச்சிலை | பலம் | ½ |
| திப்பிலி | | ½ | கிச்சிலிக்கிழங்கு | | ½ |

| | | | |
|---|---|---|---|
| மிளகு | ½ | செவ்வள்ளிக்கொடி | ½ |
| கடுக்காய் | ½ | சண்பகப்பூ | ½ |
| நெல்லிக்காய் | ½ | சந்தனத்தூள் | ½ |
| தான்றிக்காய் | ½ | சீரகம் | ½ |
| கஸ்தூரிமஞ்சள் | ½ | கருஞ்சீரகம் | ½ |
| அதிமதுரம் | ½ | செங்கழுநீர்க்கிழங்கு | ½ |
| ஏலரிசி | ½ | கோஷ்டம் | ½ |
| பூஞ்சாந்து | ½ | அக்கராகாரம் | ½ |
| இளியூறல்பட்டை | ½ | மஞ்சிஷ்டி | ½ |
| இலவங்கப்பட்டை | ½ | மரமஞ்சள் | ½ |
| இலவங்கப்பத்திரி | ½ | கோரைக்கிழங்கு | ½ |
| இலவங்கம் | ½ | வலம்புரிக்காய் | ½ |
| சாதிக்காய் | ½ | இடம்புரிக்காய் | ½ |
| சாதிபத்திரி | ¼ | | |

செய்முறை.

மேலே சொன்ன கஷாயவகைகளை நருக்கி ஒரு பாண்டத்தில் போட்டு (24) படி சலமவிட்டு (1½) படியாகச் சுண்டக் காய்ச்சிவடி கட்டிக்கொண்டு அதிலே பால் நீக்கி மற்றைய சாறு வகைகளை யெல்லாங் கலந்து பிறகு மேற்படி கற்கவகைகளை யெல்லாம் பசும்பாலால ரைத்து (2) படி வெள்ளாட்டுப்பால் விட்டுக்குழைப்பி முன்சாறு கஷாயத்தோடு கலந்து அடுப்பேற்றி ஒரே விறகால் சிறுதீபாயெரித்து மெழுகுபதமாகும் போது இறக்கிவடிகட்டிக் கணபதிக்குப் பூசை செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

ஸ்நானஞ்செய்யும் வகையும் தீரும்நோயும்,

பத்தியமும்.

இதில் வாரத்திற்கு (3) முறைசீயக்காய் அரைப்பிட்டு ஸ்நானஞ் செய்து கொண்டுவந்தால் மேகம், நீர்திரிவு, நீரெரிச்சல், க்ஷயம், கண் எரிச்சல், கண்புகைச்சல, வெள்ளை, அஸ்திசுரம், மயக்கம், செந்நிசிரங்கு, இவைகள், தீரும் பத்தியம். புளி, புகை, கசப்புப்பண்டம், பெண்போகம், வாயு பதார்த்தம், இவைகளை நீக்கவேண்டும்.

7. கீழ்வாய் நெல்லித்தயிலம்.

| | | |
|---|---|---|
| கீழ்வாய்நெல்லி செடிசமூலம் | வீசை | ½ |
| நல்லெண்ணெய் | வீசை | 1 |
| பசும்பால் | படி | 1 |
| சீரகம் | பலம் | 1 |

செய்முறை.

மேற்படி கீழ்வாய் நெல்லியை யிடித்து ஒருபாண்டத்திற் போட்டு (8) படிசலம் விட்டு ஒருபடியாகச் சுண்டக்காய்ச்சி இறுத்து அதில் எண்ணெயைக் கலந்து பிறகு சீரகத்தைப் பாலாலரைத்துக் கலக்கிப் பின்பு எல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து அடுப்பேற்றி மெழுகுபதத்தில் வடித்துவைத்துக் கொள்ளவேண்டும்.

ஸ்நானஞ்செய்யும் வகையும் தீருரோகமும்,

பத்தியமும்.

இதில் வாரத்திற்கு (2) முறை ஸ்நானஞ் செய்துகொண்டுவந்தால், பித்தவெட்டை, மயக்கம் மஞ்சள்காமாலை, வாந்தி, ஓக்காளம், வாயில் நீர்சுறப்பது, உட்காய்ச்சல், நடுக்கல், இவைகள் தீரும் பத்தியம் உஷ்ணமான பதார்த்தங்களும், பலமுள்ள பதார்த்தங்களும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

# பதின்மூன்றாவது அத்தியாயம்.

## தைலவர்க்கம்.

சம்பூர்ணம்.



கடவுள் துணை.

# பதினென்காவது அத்தியாயம்.

## பற்பவர்க்கம்.

### 1. துருசுகுருபற்பம்.

செய்முறை.

ஒருபலம் மயில்துத்தத்தைக்கொண்டுவந்து சட்டியிலிட்டு அடுப்பே ற்றி முப்பூச்செயநீரால் ஒருநாளைக்கு (4) நாழிகைவீதம் (3) நாள் சுருக்குக்கொடுத்துப் பிறகு இப்படியே நவாச்சாரதிராவகத்தால் (3) நாள்செய்து வெயிலிலுலர்த்தி இதன் எடைக்குச்சரியாக வங்கச்சுண்ணம் எடுத்துச்சலம்விட்டரைத்து மேற்படி துருசுக்குக்கவசஞ்செய்து வெயிலில் (7) நாள்உலர்த்த கல்சுண்ணாம்புச்சீலை (3) செய்து (5) எருவிற்புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப்பார்த்தால் சுத்தவெண்மையாய் நீறிப்போகும். இதையெடுத்துப் பதனம் பண்ணிவைத்துக்கொள்ளவேண்டும் இது குருபற்பம்.

### 2. இரசபற்பம்.

செய்முறை.

ஒருபலம் இரசத்தைச் சுத்திபண்ணிக் கல்வத்திலிட்டு அதில் 1-வராகனெடை மேற்படி குருபற்பத்தைச்சேர்த்து எச்சிலாலரைத்துப் பில்லைசெய்து வெயிலிலுலர்த்தி ஒரு அகலில் தாளிக்காத கல்சுண்ணாம்பைத் தூளாக்கி மேலும், கீழும்போட்டு, நடுவில்பில்லையை வைத்துச் சீலைமண்செய்து உலர்த்திப்பத்து எருவிற் புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்க்கப் பற்பமாகும் அதையெடுத்துப் புட்டியில்வைத்துக் கொள்ளவேண்டும்.

அநுபானமும் தீரும்நோயும், பத்தியமும்.

இதில் ஒருநாளைக்கு (2) வேளையும் இரண்டு அரிசியெடை தேனிற்சாப்பிட்டுக்கொண்டு வந்தால், கைகால் முடக்கல், சூலை, சர்வாங்கவாதம், குன்மம், இசிவு, சந்நி, இவைகள் தீரும். பத்தியம் புளி, புகையிலை, கடுகு, நல்லெண்ணெய் இவைகளை நீக்கவேண்டும்.

### 3. வெங்காரம் சிலாசத்து மான்கொம்பு.

#### சுல்நார் இலைகள் சேர்ந்தபற்பம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெங்காரம் | பலம் | ½ | சிலாசத்து | பலம் | ½ |
| மான்கொம்பு | | ½ | சீசக்கல்நார் | | ½ |

#### செய்முறை.

இவைகளை நன்றாகப்பொடிசெய்து வைத்துக்கொண்டு பருத்திச்செடி சமூலத்தைச்சுட்டுச் சாமபலாக்கி ஒருபடி அளந்துகொண்டு ஆறுபடி சலம்விட்டு நன்றாய்க்கலக்கி மூடிவைத்து நான்காவது நாள் காலையில் தெளிவிறுத்து முன்பொடித்த மருந்தில்விட்டு (4) சாமமரைத்துப் பில்லைதட்டியுலர்த்தி அகலில்வைத்து மேலேஅகல் மூடி (40) எருவிற் புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப்பார்த்தால் வெளளையாய் நீற்றிருக்கும் அதையெடுத்துக் கல்வத்திற்போட்டுக்கொண்டு அத்துடன் நவாச்சாரம் காசெடையும் கர்ப்பூரம் காசெடையும், வீரம் காசெடையும், பூநீறுகாசெடையும், சேர்த்து முன்சலத்தால் (4) சாமமரைத்துப் பில்லைதட்டி வெயிலில் காயவைத்து அகலில்வைத்து மேலும் கீழும் கல்சுணணம்வைத்து மேலும் கல்மூடிச்சீலைமண்செய்து (40) எருவிற்புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்த்து வெள்ளையாய் நீறிப்போகும் அப்படி வெள்ளையாகாமல்கறுத்தால் கோழிமுட்டைவெண்கருவால் மறுபடியும் அரைத்து முன்போலவே புடம்போட்டு எடுத்துக்கொண்டு அந்தப்பற்பத்தை நிறுத்து அதில்பாதி சுத்திசெய்த இலிங்கத்தைத் தூள்பண்ணி இரண்டையும் ஒன்றாய்ச்சேர்த்து வைத்துக் கொள்ளவேண்டும்.

#### அநுபானமும், திரும்வியாதியும் பத்தியமும்.

இதில்காலை, மாலை, அரைக்கால் வராகனெடைவீதம் இளநீரிற் சாப்பிட்டால், பெருவயறு, கிறிச்சினம், நீரடைப்பு, சதையடைப்பு, கல்லடைப்பு, நீர்குறைச்சல், நீர்எரிச்சல், கவிகை, நீராம்பல் இவைகள் தீரும் பத்தியம் பச்சரிசிகஞ்சியும் பலமுள்ளபதார்த்தமும் சேர்க்கவேண்டும்.

4 பவளபற்பம்.

செய்முறை.

ஒருபலம் நல்லபவளத்தைத் தூள்பண்ணிப் பிங்காணில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு ஒரு நாளெல்லாம் ஊறவிட்டு மறுநாள்காலையில் அதைக்கழுவி எடுத்துக்கொண்டு கல்வத்திலிட்டு அந்த எடைக்குக் கர்ப்பூரசிலாசத்துச் சேர்த்துப் பெண் பிரண்டைச் சாற்றால் நான்கு சாமமரைத்துப் பில்லைதட்டி வெயிலில் நன்றாயுலர்த்தி அகலில்வைத்து மேலுமகல் மூடிச்சீலைமண் (3) செய்து உலர்த்திப்பத்தெருவிற் புடம்போட்டு (1) நாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்த்தால் நன்றாய்வெளுத்து நீறறிருக்கும் மறுபடியும் முன் பிரண்டைச்சாற்றிலேயே அரைத்து ஒருபுடமும், புளியாரைச்சாற்றிலரைத்து ஒருபுடமும் போட்டு எடுத்து வைத்துக் கொள்ளவும்.

அநுபானமும், தீரும்நோயும், பத்தியமும்.

இதில் காலை மாலை (2) குன்றிமணி யெடை வெண்ணெயில் அரைமண்டலம் வரைக்கும் சாப்பிட்டுக்கொண்டு வந்தால், மேக இருமல், எலும்புருக்கி, அஸ்திவெட்டை, மதுமேகம், இவைகளும், தேனிலிழைத்துச் சாப்பிட்டால், சகலரணம், தேகஙமைச்சல் மேக வாயு, இவைகளும தீரும். பத்தியம் உஷ்ணசமனமான பதார்த்தங்களையும், இருதயத்திற்குப் பலங்கொடுக்கும் பதார்த்தங்களையும், சேர்த்துக்கொள்ள வேண்டும்.

# பதினான்காவது அத்தியாயம்.

பற்பவர்க்கம்.

சம்பூர்ணம்.

---

உ

தெய்வமே துணை

# பதினைந்தாவது அத்தியாயம்.

## செந்தூரவர்க்கம்.

### 1. அயசெந்தூரம்.

செய்முறை.

சுத்திசெய்த அரப்பொடி ஒருபலத்தைக் கல்வத்திலிட்டு அத்துடன் சுத்திசெய்த நெல்லிக்காயகந்தகம ஒருபலம போட்டு, எலுமிச்சம்பழச்சாற்றால் (4) சாமமும், மஞ்சள் கரிசலாங்கண்ணிச் சாற்றால் (4) சாமமும, நன்றாயரைக்கும்போது ஒவ்வொருதரம் வராகனெடை சுத்தி செய்த பூநீறு போட்டு நன்றாயரைத்துப் பில்லைசெய்து வெயிலிலுலர்த்தி ஒரு அகலில் வைத்து மேலும் அகல் மூடிச் சீலைமண் (3) செய்து உலர்த்தி (30) எருவிற்புடம் போடவேண்டும், இப்படியே மறுபடியும் கரிசலாங்கண்ணிச்சாற்றால் மாத்திரம் அரைத்து (3) புடம், போட்டு எடுத்து அரைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

அநுபானமும், தீருநோயும், பத்தியம்.

இதில் காலை, மாலை, அரைக்கால வராகனெடை செந்தூரத்தே னிலிழைத்து (1) மண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டுக்கொண்டு வந்தால் பாண்டு, பித்தவெட்டை, பித்தவாயு அரோசகம், அன்னத்துவேஷம், மயக்கம, வாந்தி, இவைகள் தீரும பத்தியம் சர்வபதார்த்தங்களையும் சேர்த்துக்கொள்ளலாம்.

### 1. அயக்காந்த செந்தூரம்.

சரக்குவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அரப்பொடி | பலம் | 1 | ஊசிக்காந்தம் | பலம் | 1 |
| சாதிலிங்கம் | | 1 | வெங்காரம் | | 1 |
| இரசம் | | ½ | நெல்லிகந்தகம் | | ½ |

செய்முறை.

பங்களை யெல்லாம் கல்வத்திற்போட்டு எலுமிச்சம் பழச் சாறுவிட்டு (4) சாமம் அரைக்கவேண்டும் அப்படியரைக்கும் போது 2½-வராகனெடை சுத்திசெய்த பூநீறு கூடப்போட்டு அரைத்துப் பில்லைதட்டி வெயிலிற்காயவைத்து அகலில்வைத்து மேலும் அகல் மூடிச்சீலைமண் (3) செய்து உலர்த்தி (30) எருவிற்புடம் போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்து எடுத்தரைத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

அநுபானமும் தீருநோயும், பத்தியமும்.

இதில் காலை மாலை (2) குன்றிமணி யெடைதேனிலிழைத்துச் சாப்பிட்டுக் கொண்டுவந்தால், பாண்டு, கிராணி, பித்தம், வாயு, அக்கினிமந்தம், சூலை, கர்ப்பநோய், வாந்தி, வயிறுப்பிசம், மயக்கம், இவைகள் தீர்ந்து, தாது விர்த்தியுண்டாகும பத்தியம் பலமுள்ள பதார்த்தங்களைச சேர்த்துக்கொள்ள வேண்டும் கடுகு நல்லெண்ணெய்வகை யராசேர்க்கப்பட்டது.

3, மண்டூர செந்தூரம்.

சரக்குவகை.

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த பழஞ்சிட்டம் | பலம் | 1 |
| நெல்லிக்காய்க்கந்தகம | வராகனெடை | 1 |
| சுத்திசெய்த இரசம் | | 1 |
| இலிங்கம் | | 1 |
| சுத்திசெய்த பூநீறு | | 1 |
| வெங்காரம் | | 1 |

செய்முறை.

இவைகளை யெல்லாங் கல்வத்திலிட்டுப் பொடிந்து எலுமிச்சம், பழச்சாற்றில் மெழுகுபதமாயரைத்துப் பில்லைதட்டிவெயிலிலுலர்த்தி அகலில்வைத்து மேலகல்மூடிசசீலைமண் 3-செய்து (30) எருவிற் புடம்போடவேண்டும் இப்படியே (10) புடமும், கரிசலாங்கண்ணிச்சாற்றில் (10) புடமும், செருப்படிச்சாற்றில் (10) புடமும், அரசம்பட்டைச்சாற்றில் (5) புடமும், போட்டெடுத்துப்பொடித்துவைத்துக்கொள்ள வேண்டும்.

அநுபானமும், தீருநோயும், பத்தியமும்.

இதில் காலை மாலை (3) குன்றுமணி யெடை திரிகடுகு சூரணத்திற்கலந்து தேனிலிழைத்து ஒருமண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டுக் கொண்டு வந்தால், விஷஜுரண்டு, காமாலை, பித்தம், வாந்தி, விக்கல், சலதோஷம், இவைகள் நீக்கித்தேகத்திற்கு நல்ல பலத்தைக்கொடுக்கும் இச்சாபத்தியம்.

4. அப்பிரக செந்தூரம்.

செய்முறை.

கிருஷ்ண அப்பிரகம் வேண்டிய அளவுகொண்டுவந்து ஒருசட்டியிலிட்டு மேல்சட்டிமூடி (30) எருவிற் புடம்போட்டு எடுத்து மத்தியிலிருக்கின்ற கல்லை எடுத்துப் போட்டுவிட்டு அஞ்சுபலம் நிறுத்து எடுத்துக் கல்வத்திற் போட்டு அத்துடன் அரைப்பலம்நெல்லிக்காய்க்கந்தகம் சேர்த்துப் பொடித்து எலுமிச்சம்பழச்சாற்றால் (4) சாமமரைத்துப் பில்லைதட்டிவெயிலிலுலர்த்தி அகலில்வைத்துமேல கல் மூடிச் சீலைசெய்து உலர்த்தி முப்பதெருவிற் புடம்போடவேண்டும் இப்படியே ஒவ்வொருபுடத்திற்கும் கந்தகம் கூட்டிமேற்படி சாற்றால் (10) புடமும் கந்தகம் சேர்க்காமல் கரிசலாங் கண்ணிச்சாற்றால் (10) புடமும் செருப்படிச்சாற்றால் (10) புடமும், பொடுதலைச்சாற்றால் (10) புடமும, சிறுசெருப்படிச்சாற்றால் (5) புடமும், போட்டெடுத்து அரைத்து வைத்துக்கொள்ளவேண்டும்.

அநுபானமும் தீருநோயும், பத்தியமும்.

இதில் காலை மாலை (2) அரிசியெடை தேனிலிழைத்துக் கால் மண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டால் க்ஷயம், இருமல் சேஷ்மமும், சிந்தில்கொடி சூரணத்தில் அநுபானஞ்செய்து சாப்பிட்டால் நீரிழிவு, உளமாந்தை வெள்ளை அஸ்திசூடு, எலும்புருக்கி இவைகளும் நீங்கி நரம்புகளெல்லாம் முறுக்கேறித் தாதுவிர்த்தியுண்டாகும் பத்தியம் இச்சாபத்தியம்.

5. வேறு அப்பிரக செந்தூரம்.

சரக்குவகை.

கிருஷ்ண அப்பிரகம் பலம் 10. நெல்லிக்காய்க்கந்தகம் பலம் 1

## செய்முறை.

மேலே சொன்ன அப்பிரகத்தை அப்படியே கொண்டுவந்து இரண்டு பெரிய மண்சட்டிகள் வாங்கி அவற்றை இரண்டின்வாயும் ஒன்றோடொன்று சந்துகொஞ்சமும் தெரியாதபடி பொருந்தத்தேய்த்து வைத்துக்கொண்டு அதில் ஒருசட்டியில் மேற்படி அப்பிரகத்தை வைத்து மற்றச்சட்டியால் மூடி நன்றாய்ச் சந்து தெரியாதபடி ஒருநாளைக்கு ஒருமுறையாக 3-நாட்களுக்கு 3-மண்சீலை செய்து நன்றாய் புலர்த்தி பிறகு ஐந்தாவது நாள்காலையில் தானிருந்து வாழுமிடத்திற்கு ஈசானதிக்கில் ஒருகஜ சதுரத்திற்கும் பசுஞ்சாணங்கொண்டு மெழுகி விநாயகமூர்த்தியை எழுந்தருளப்பண்ணி ஷோடசோப சார நைவேத்திய முதலியவை செய்து பின்னர் சீலமண்செய்து தயாராக வைத்திருக்கின்ற சட்டிக்குக் கர்ப்பூராலாத்திசெய்து அதன் பிறகு மேற்படி இடத்தில 25-வறட்டியை முன்னர் அடுக்கி அதின்பேரில் சட்டியைவைத்து மேலேயும் 25-வறட்டியையடுக்கித் தீயிட்டுப் புடம்போட்டு அன்றைக்கெல்லாம விட்டு மறுநாள் காலையில் சட்டியைப் புடத்தினின்றும் எடுத்துப் பிரித்துப்பார்த்தால் உள்ளே வைத்த அப்பிரகமானது பொரிந்துமலர்ந்திருக்கும் அப்படி யிருக்கின்ற அந்த அப்பிரகத்தின் மத்தியில் ஒருகல்லிருக்கும் அந்தக்கல்லை எடுத்து யெறிந்துவிட்டு மற்றைய அப்பிரகத்தை எடுத்துக் கல்வத்திற் போட்டுக்கொண்டு அத்துடன் முன்சொல்லிவைத்திருக்கின்ற கந்தகத்தையுஞ் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் ஒருநாளைக்கெல்லாம் நன்றாயரைத்து மறுநாளைக்குச் சக்கராகாரமாகப்பில்லை செய்து வெயிலில் நன்றாய்புலரவைத்து ஒரு அகலில் வைத்து மேலு மகல்மூடிச் சீலமண்செய்து முன் சொன்னபடி 50-வறட்டியில் புடம்போடவேண்டும் இப்படியே எலுமிச்சம்பழச்சாற்றால் ஒவ்வொருதரத்திற்கும கந்தகஞ் சேர்த்துச் சேர்த்து அரைத்துப் (10) புடம் போடவேண்டும இப்படி போட்டானபிறகு வேளைச்செடி சமூலங்கொண்டுவந்து இடித்துப்பிழிந்து இப்படியே அரைத்துப் (10) புடம்போடவேண்டும் ஆனால் இந்தப் பத்துபுடத்திற்கும் கெந்தகம்சேர்க்க வேண்டியதில்லை அதின்பிறகு தும்பைச்சாற்றாலும் மேலே செய்ததுபோலவே பத்துப்புடம் போடவேண்டும் இதற்கும் கந்தகம் சேர்க்கவேண்டியதில்லை இப்படி (30) புடமும் தவறாமல் போட்டானபிறகு அப்பிரகப்பில்லையைப் பார்த்தால் நன்றான குருவிரத்தம் போல

செவந்திருக்கும் அதை யெடுத்துத் தூள் செய்து புட்டியில் வைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீருரோயும்.

இந்தச்செந்தூரத்தில் வேளைக்கு ஒரு அரிசியெடை மூலைப்பாலிலிழைத்துச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் எடடுவகையான க்ஷயங்கள், சுளை, சிணுக்கிருமல், சேஷ்மம், இவைகளுப, இதை ஸ்ந்தரசர்க்கரையில் கலந்து தேனிலிழைத்துச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் நீரிழிவு, வெள்ளைமார்க்கை, பிரமியம, வெட்டையினால் உண்டானசலவூட்டுரூடு, எலுமபுருக்கி இவைகளும் நீங்கித் தேகம் வலிமையும் பலத்தையுமடையும தாதுபுஷ்டியுண்டாம் கண்களுக்கு நல்ல பார்வையுண்டாம், பத்தியம் இச்சாபத்தியம பால்சோறுகாக்க வேண்டாது இப்படி செய்யாமல் (100) புடம்போடுவதும் சிலர் வழக்கமாகவிருக்கிறது.

௫. திரிலோகசெந்தூரம்.

சரக்குவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அரப்பொடி | பலம் | 1 | நெ. கந்தகம் | பலம் | 3 |
| அப்பிரகம் | | 1 | வாலைரசம் | | $1\frac{1}{2}$ |
| காந்தம் | | 1 | | | |

செய்முறை.

இந்த ஐந்து சரக்குகளில் கந்தகத்தையும் வாலைரசத்தையும் வேறேவைத்துக்கொண்டு மற்றையமூன்றுசரக்குகளில் முதலாவதாகிய அரப்பொடியை ஒரு பீங்கானில்போட்டு நாகப்பட்டைச்சாறு விதக்கவிட்டு 3-நாள்வரைக்கும் வெயிலிலுலர்த்திப் பின்னர் கல்வத்திலிட்டு மற்றைய இரண்டு சரக்குகளையும் அத்துடன்போட்டு நன்றாய்ப் பொடித்து, அதிற்பிறகு எலுமிச்சம்பழச்சாற்றால் 1-சாமம் வரைக்கும் நன்றாய்யரைத்து முக்கால்பாகம் அரைத்தானபின் மேற்படி வேறே வைத்திருந்த 2-சரக்குகளையும் கூட்டிச்சேர்த்து நன்றாயரைத்து அதின் பின்னர் $3\frac{1}{2}$-வராகனெடை பூநீறு அத்துடன் கலந்து நன்றாயரைத்துப் பிறகு பஞ்சகல்லுப்பு ... சாற்றால் 4

சாமமும், அதின் பிறகு செருப்படிச்சாற்றால் 4-சாமமும், அதின் பிறகு கற்றாழஞ்சோற்றால் 4-சாமமுமாக நன்றாயரைத்து இலேசான பில்லையாகச் செய்து வெயிலிலுலர்த்தி ஒரு அகலில் வைத்து மேலு மகல் மூடிச் சீலைமண் 3-செய்து நன்றாயுலர்த்தி 30 எருவிற் புடம் போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் காலையில் புடத்தைப் பிரித்துப்பார்த்து எடுத்து அகலைத்திறந்து உள்ளிருக்கும் பில்லையை எடுத்துக் கல்வத்திலிட்டு சாதிலிங்கம அரைப்பலம் கூடச்சேர்த்துக் கற்றாழஞ்சோற்றால் நன்றாயரைத்து முன்போலவே பில்லைசெய்து வெயிலிலுலர்த்தி அகலில்வைத்து மேலுமகல்மூடிச் சீலைசெய்து மருபடியும் 30-எருவிற் புடம்போட்டு ஒருநாள்விட்டு மறுநாள்பிரித்துப் பார்த்தால் ரொம்பவும் செவந்தநிறமாகவிருக்கும் அப்பில்லையை யெடுத்துப் பொடித்துவைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீருநோயும்,

பத்தியமும்.

இதில் ஒருநாளைக்கிரண்டு வேளையும் ஒருபணவெடை அளவாகக்கொண்டு சீந்திற்சூரணத்திற்கலந்து நெய்யிலிழைத்துச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் நீரிழிவு, பாண்டு, 40-பித்தம், சகலவாயு, கண்சூடு, உள்ளெரிச்சல், இருமல், இவைகளெல்லாம் நீங்கி, தேகம்ரொமபவும பலத்தையும் குளிர்ச்சியையும் அடையும் பத்தியம் இச்சாபத்தியம.

7. பஞ்சலோக செந்தூரம

சரக்குவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தங்கம் | வராகனெடை | 1 | கந்தகம் | வராகனெடை | 10 |
| வெள்ளி | | 1 | இரசம் | | 5 |
| செம்பு | | 1 | வீரம் | | 2¼ |
| காந்தம் | | 1 | பூநீறு | | 1 |
| அரப்பொடி | | 1 | | | |

செய்முறை.

மேற்படி யாகமுதலிலிருக்கின்ற 5-சரக்குகளையும் ஒன்றாகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு நன்றாய்ப்பொடித்துக் கலக்கப்பார்த்துக்கொ

ண்டு பிறகு மற்றைய நான்கு சரக்குகளையும் ஒன்றாகசேர்த்து எலு மிச்சம்பழசசாற்றால் நான்குசாமமவரைக்கும் நன்றாயரைத்துப் பில்லைதட்டி உலரவைத்து அந்தப்பில்லையை வேறொரு அகல்லைத் துமேலுமகல்மூடிச் சீலைமண்மூன் றுசெய்து நன்றாயுலர்த்தி 30-எரு விற்புடமபோட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப்பார்த்தால் அரைவாசி ஊதாநிறமாயிருக்கும அதையெடுத்துக் கல்வத்திற்போட்டுக்கொண்டு முன்னரைத்ததுபோலவே மறுபடியும் மஞ்சள் கரிசலாங்கண்ணிச்சாற்றால் நான்கு சாமமரைத்துப் பில்லைதட்டி வெயிலி லுலர்த்தி அந்தப்பில்லையை ஒரு அகலில்வைத்து மேலுமகல்மூடிச் சீலைமண் 3-செய்து நன்றாயுலர்த்தி 30-எருவிற் புடம்போட்டு ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்தெடுத்துப் பார்த்தால முக்கால்வாசி செவந்தசெந்தூரமாயிருக்கும அதை யெடுத்து மறுபடியும் கல்வத்திற்போட்டுக்கொண்டு தூள்படுத்தி செருப்படிச்சாற்றால் முன்னரைத்ததுபோலவே நான்குசாமம்வரைக்குமரைத்துப் பில்லைசெய்து உலர்த்தி ஒரு அகலில்வைத்து மேலுமகல்மூடிச் சீலைமண் 3-செய்து நன்றாயுலர்த்தி 30-எருவிற் புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் புடத்தைப் பிரித்துப்பார்த்தால் நல்ல இரத்தம்போற் செவந்த செந்தூரமாயிருக்கும் அதையெடுத்துத் தூள்பண்ணி புட்டியில்வைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீருநோயும், பத்தியமும்.

இதில் ஒருபணவெடை செந்தூரத்தைத் திரிகடுகுசூரணத்தில் கலந்து தேனில்குழைத்து ஒருநாளைக்கிரண்டு வேளையும ஒருமண்டலம்வரைக்கும் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் வாயு எண்பதும, பித்தம்நாற்பதும், அதினால்வரும் பித்தமூலமும் இருபது, சேஷ்மங்களும், நீங்கும். தேகம்பலப்படும் காந்திமீறும் நரமபு முறுக்கேறும் பத்தியம் புளி, புகையிலை, பொடி, பெண்போகம், வெயில், அதிக நித்திரை இவைகளை நீக்கவும்.

8. கந்தக செந்தூரம்.

சரக்குவகை.

பதங்கரசபற்பம் பலம் 4 நெல்லிக்காய்கந்தகம் பலம்

அரிதாரம் ¼.

செய்முறை.

மேற்படி மூன்று சரக்குகளையும் கல்வத்திலிட்டுப் பசைவிடாத படியே நன்றாய்ப்பொடித்துகாசிக் குப்பியில மேற்படி பொடியைப் போட்டு வாய்க்குப் பலப்பக்கல்லால் மூடி ஒருநாளைக்கொரு சீலையாக ஏழுநாளைக் கேழுசீலைமண்செய்துநன்றாயுலர்த்தி வைத்துக்கொண்டு வேறே ஒரு அகன்றசட்டிகொண்டுவந்து அந்தச் சட்டியில் நான்கு விரற்கடைமணல்கொட்டி அதினடுவில் மேற்படி உலர்த்திய குப்பியைவைத்துப் பிறகு அந்தக்குப்பி கழுத்தளவுமணலைக்கொட்டிப்பரப்பி மேல்சட்டிமூடாமல் அடுப்பேற்றி, தீபாக்கினி 3-சாமமும, கமலாக்கினி 3-சாமமும் காடாக்கினி 3-சாமமுமாக எரித்து ஒருநாள்விட்டு மறுநாள் எடுத்து அந்தக் குப்பியை எடுத்து உடைத்துப் பார்த்தால் தேங்காய்போல் கட்டியசெந்தூரமாயிருக்கும் அதையெடுத்துப் பொடித்து ஒரு புட்டியில்வைத்துக்கொள்ளவேண்டும்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீருநோயும்,

பத்தியமும்.

இதில் ஒரு அரிசியெடை தேனிலிழைத்து வேளைக்கிரண்டு வேளையும ½-மண்டலம்வரைக்கும் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் வாதசம்பந்தமாகவும் சேஷ்மசம்பந்தமாகவு முண்டாகின்ற வியாதிகளெல்லாம் நீங்கும் இச்சாபத்தியம்

9. வேறு கலப்புச்செந்தூரம்.

சரக்குவகை.

| | | |
|---|---|---|
| மேற்படி முடித்த செந்தூரம் | பலம் | 1 |
| பதங்காசபற்பம் | | 4 |
| சுத்திசெய்த நெல்லிக்காய்கந்தகம் | | ½ |
| அரிதாரம் | | ¼ |

செய்முறை.

மேலேசொன்ன நான்கு சரக்குகளையும் கல்வத்திலிட்டு ஒன்றும் பசைவிடாமல் அம்மாபொடியாகும்படி நன்றாயரைத்து ஒருநா

சிகுப்பிகொண்டுவந்து அந்தக்குப்பிக்கு அரைவாசியிருக்கும்படி மே ற்படி அரைத்த சரக்குப்பொடியைப்போட்டு அந்தக்குப்பியின் வா ய்க்குச் சரியான அளவாகச்செயகல்லைத் தேய்த்துக் கார்க்காகப்போ ட்டு வைத்துக்கொண்டு பிறகு நலல களிப்பாகப் பார்த்துக் களிமண் கொண்டுவந்து அதை நல்லசலமவிட்டுப் பிசைந்து அந்தமணணால் ஒவ்வொருசீலையாக உலர்த்தி யுலாத்தி ஏழுசீலைமண்செய்து வெயி லில் நன்றாயுலர்த்திவைத்துக்கொண்டு பிறகு ஒரு அகன்றசட்டிகொ ண்டுவந்து அந்தச்சட்டியில் 6-விரற்கடையளவு சிறுமணல்தக்கொ ட்டி அதின் மத்தியில் குப்பியைவைத்து அந்தக் குப்பியிற கழுத்து வரைக்கும் மணல்கொட்டி மறைத்து அந்தச் சட்டிக்குமேல் சட்டி மூடாமல் அடுப்பேற்றி 4-நாழிகைவரைக்கும் தீபாக்கினியாகவும், 4-நாழிவரைக்கும் கமலாக்கினியாகவும, 4-நாழிகைவரைக்கும காடா க்கினியாகவும் ஒரேவிறகால் எரித்து ஒருநாளெல்லாம ஆறவிட்டு மறுநாள்காலையில பிரித்துப்பார்த்தால் அது நன்றாய்சசெவந்து கா லையில் உதயமாகும் சூரியனுடைய நிறமாகவிருக்கும அதையெடுத் துப்பொடித்து ஒருபுட்டியில் வைத்துக்கொள்ளவேண்டும.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீருநோயும,

பத்தியமும்.

இதில் வேளைக்கு ஒரு அரிசியெடைப் பிரமாணம் எடுத்துதே னில் இழைத்து ஒருநாளைக்கிருவேளையும சாப்பிட்டுக்கொண்டுவந் தால் சந்நி, தோஷம, கபம, இருமல், ஈசம, க்ஷயம, உளமாந்தை, சுரம, முறைச்சுரம், கைகாலெரிச்சல், இவைகள் நீங்கும் பத்தியம் புளி புகையிலை, மூக்குத்தூள். வெற்றிலைப்பாக்கு பெண்போகம், இவைகளை நீக்கவும்.

10. ரசப்பதங்கம் எடுக்கும்விதம்.

சரக்குவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நெ கந்தகம் | பலம் | ½ | இரசம் | பலம் | 4 |
| கறியுப்பு | | 4 | கல்லுப்பு | | 4 |
| செங்கல்துண்டுகள் போதுமானவளவு | | | | | |

செய்முறை.

முன்னதாக ஒரு ஓட்டில் கந்தகத்தைப்போட்டடுப்பேற்றி உருக்கி அது உருகும்போது இரசத்தை அதில் விட்டால் இரண்டும் தொந்திக்கப்பட்டு ஒருவகையாய்க்கருப்பும, ஊதாவும் கலந்த நிறமான தூளாகும அந்தத் தூளை வேறே வைத்துக்கொண்டு இரண்டு சட்டிகள் அகன்றதாய்க்கொண்டுவந்து அந்த இரண்டையும் வாய் பொருந்த நன்றாய்த்தேய்த்து அதில் ஒன்றில் இந்த உப்பு இரண்டையும் தூவிப் பிறகு ரசப்பொடியைத்தூவி அதின் பிறகு செங்கல்துண்டுகளைப் போட்டு மேல்சட்டிமூடிச் சீலைமண் 9-செய்து நன்றாயுலாத்தி அடுப்பேற்றி 4-சாமம்வரைக்கும நன்றாயெரித்து ஆற்விட்டு நன்றாயாறினபின் பிரித்துப் பார்த்தால் மேல்சட்டியில் நன்றாய்ப்படிந்திருக்கும் அதுவே ரசப்பதங்கமாகும் ஆகையால் அதையெடுத்துப் பதனமபண்ணி வைத்துக்கொள்ளவேண்டும இதையே மருந்துகளில் சேர்க்கவேண்டியவிடத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டும் சந்நிதோஷம் முதலியவைகளுக்கும் பனைவெல்லத்தில் அநுபானஞ் செய்துகொடுக்கலாம்.

காளகண்டமேக நாராயணசெந்தூரம்.

சரக்குவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரசபற்பம் | பலம் | 8 | வெள்வங்கபற்பம் | பலம் | 1 |
| கர்தகம் | | 1 | நாகபற்பம் | | ½ |
| தாளகம் | | 1 | கருவங்கபற்பம் | | ¼ |
| மனோசிலை | | ½ | செம்புபொடி வராகனை | | 3½ |
| ரசசெந்தூரம் | | ½ | தங்கம் | | 1¼ |
| இலிங்கம் | | ¼ | நாபி | பலம் | 1 |
| வெள்ளிபற்பம் | | ¼ | | | |

செய்முறை.

இவைகளில் செம்புபொடி, தங்கம், நாபி இம்மூன்றையும் முதலில் கலவத்திலிட்டு நன்றாய்ப்பொடித்துப் பிறகு மஞ்சள் கரிசலாங்கண்ணிச்சாற்றால் தனக்கு தெரியாதபடி செய்துகொண்டு அதின் பிறகு மற்றைய சரக்குகளையெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்துமறுபடியும் அந்தச்சாற்றாலேயே 2-சாமம்வரைக்கும் நன்றாயரைத்துப்பிறகு கற்

ருழஞ்சோற்றால் 4-ஜாமமும், அதின்பிறகு நல்ல முருக்கம்பூச்சாற்றால 2-சாமமும், அதின்பிறகு பாதிரிப்பூச்சாற்றால் 2-சாமமும், அதின்பிறகு எலுமிச்சம்பழச்சாற்றில் செம்பருத்திப் பூவைப்போட்டு ஊறவைத்து அந்தப்பூவெளுத்தபிறகு அதையெடுத்தெறிந்து விட்டு அந்தச்சாற்றால் 2-சாமமும் நன்றாயரைத்து வெயிலிலுலர்த்திவைத்துக்கொண்டு பிறகு ஒருகாசி குப்பிகொண்டுவந்து அந்தக்குப்பிக்குப்பாதியிருக்கும்படி மேற்படிசரக்குப்பொடியைப்போட்டு அதின் வாய்க்குப்பலப்பக்கல்லால் கார்க்குப்போட்டு அந்தக்குப்பிக்கு கழுத்தளவு 7-சீலைமண்செய்து உலர்த்தி வேறேவைத்துக்கொண்டு வேறொருவர் யுகன்றசட்டிகொண்டுவந்து அதில் நான்கு விரற்கடையளவு மணல்கொட்டி அந்தமணலின்நடுவில் மேலேஉலர்த்தி வைத்திருக்கின்ற குப்பியைவைத்து அந்தக்குப்பியின்கழுத்துவரைக்கும் மறுபடியும் மணலைக்கொட்டி அந்தச்சட்டியை அடுப்பேற்றி விக்கினவிநாயகனை நன்றாய்ப்பூஜித்து தீபாக்கினியாக எட்டுசாமமும், கமலாக்கினியாக எட்டுசாமமும், காடாக்கினியாக எட்டுசாமமுமாக வெரித்து ஒருநாளெல்லாம் ஆறவிட்டு மறுநாள்காலையில் பிரித்தெடுத்துக் குப்பியையுடைத்துப் பார்த்தால் செந்தூரம் ஊதாநிறமாயிருக்கும் அதையெடுத்துப் பொடிபண்ணிப் புட்டியில்வைத்துக்கொள்ள வேண்டும்.

சாப்பிடும்அளவும் அநுபானமும், தீரும்நோயும், பத்தியமும்.

இதில்வேளைக்கு இரண்டுஅரிசியெடையாக ஒருநாளைக்கிருவேளையும தேனிலிழைத்துச் சாப்பிட்டுக்கொண்டு வந்தால் குன்மம், சூலை, பாண்டு, காமாலை, மகோதரம், பல்லை, பீலிகை, கவிசை, சந்நிசுரம், மந்தம், அக்கினிக்குறைவு, அன்னத்துவேஷம், இவைகள் நீங்கும் பத்தியம் கடுமையானதேயாகும் பெரும்பாலும் மரக்கறியிற்சேர்ந்த பதார்த்தங்களையே சேர்த்துக்கொள்ளவேண்டும்.

12. சூதாயசெந்தூரம்.

சரக்குவகை.

| | | | |
|---|---|---|---|
| பதங்கரசபற்பம் | பலம் 2 | வெங்காரம் | பலம் $\frac{1}{4}$ |
| அரப்பொடி | 1 | நவாச்சாரம் | $\frac{1}{4}$ |
| கார்தம் | $\frac{1}{2}$ | நாபி | $\frac{1}{4}$ |
| இலிங்கம் | $\frac{1}{2}$. | கந்தகசெந்தூரம் | $\frac{1}{4}$ |

செய்முறை.

மேற்படி எட்டுச்சரக்குகளையும் ஒன்றாய்ச்சேர்த்துக் கல்வத்தி லிட்டு நன்றாய்ப்பொடித்துக் கலந்து உறவாக்கியபின் எலுமிச்சம்ப ழச்சாற்றால் 4-சாமமும் மஞ்சள்கரிசலாங்கண்ணிச்சாற்றால் 2-சாம மும் செருப்படிச்சாற்றால் 2-சாமமும் கற்றாழஞ்சோற்றால் 2-சாம மும் செம்முள்ளித்தண்டு சமூலச்சாற்றால் 1-சாமமுமாக அரைத்து நன்றாய்மெழுகாக்கி வெயிலிலுலர்த்தி வேறேவைத்துக்கொண்டு வே றொரு அகன்றசட்டிகொண்டுவந்து அதில் 4-விரற்கடைமண்ல்கொ ட்டி அந்தமணலில் மேற்படி வெயிலிலுலர்த்திவைத்திருக்கும் பொ டியை ஒருகாசிகுப்பிகொண்டுவந்து அதில்பாதிக்குப்போட்டு அந் தக்குப்பிக்குக் கழுத்துவரைக்கும் 7-சீலைமண்செய்து வாய்க்குபலப் ப கல்லால் கார்க்குபோட்டு நன்றாயுலர்த்தி மேற்படிமணலின் மத்தி யில்வைத்து அந்தக்குப்பியின் கழுத்தளவுக்கு மறுபடியும் மணல் கொட்டி அடுப்பேற்றி தீபாக்கினியாக 4-சாமமும், கமலாக்கினியாக 4-சாமமும், காடாக்கினியாக 8-சாமமுமெரித்து ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப்பார்த்தால் அது செங்கல்லின் நிறம்போல்செவந்த செந்தூரமாயிருக்கும் அதையெடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடிபண் ணிப் புட்டியில்வைத்துக்கொள்ள வேண்டும்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீரும்நோயும், பத்தியமும்.

இதில் ஒருபணவெடை ஒருநாளைக்கிருவேளையாகத் தேனிலி ழைத்துச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் காமாலை, பாண்டு, பித்தம், தலைநோய், வாதம், சந்நி, சூலை, மதுமேகம் இவைகள் தீரும். இச்சா பத்தியம்.

13, கருவங்க செந்தூரம்.

சரக்குவகை.

| | | |
|---|---|---|
| சுத்திசெய்தகாரீயம் | பலம் | 4 |
| சுத்திசெய்தஇரசம் | | |

செய் முறை.

மேலேசொன்ன இரண்டு சரக்குகளில் காரீயத்தைஉருக்கிஅது உருக்கிக்கண்விட்டாடுஞ் சமயத்தில் இரசத்தை அதிற்கலக்கப்பண்ணிப்பின்னர் ஒருபெரியசட்டியை அடுப்பேற்றி அதில் இப்படிசேர்க்கப்பட்டிருக்கும் காரீயத்தைப்போட்டு உருக்கி அது உருகும்போது ஆவாரைச்செடி சமூலமுங்கொண்டுவந்து ஒன்றுபாதியுமாக இடித்துவைத்துக்கொண்டிருந்து ரீயத்துடன் கொஞ்சங்கொஞ்சம் போட்டு 4-சாமம்வரைக்கும் வறுத்துப் பிறகுகால்சாமம் மூலிகைபோடாமல் வறுத்தால் ஒன்றாய்ச்செவந்த செந்தூரமாக இந்தவங்கமானது காணப்படும். பிறகு சட்டியையிறக்கி ஆறவிட்டு நன்றாயரைத்தபின்னெடுத்துப் பொடித்துப் புட்டியில் வைத்துக்கொள்ள வேண்டும்.

சாப்பிடும் அளவும், அநுபானமும், தீருநோயும்,

பத்தியமும்.

இதில்வேளைக்கு ஒருபணவெடையாக ஒருநாளைக்கு 2-வேளையாகத் தேனிலாவது, நெய்யிலாவது, தேனும்நெய்யும் கலந்தாவது, இழைத்துச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால், பிரமியம், பெரும்பாடு, கிறிச்சினம், நீரிழிவு, கல்லடைப்பு இவைகள்நீங்கும், பத்தியம் புளி, புகை, பெண்போகம் இவைகள் நீக்கவேண்டும்.

14. கருவங்க சுத்தி.

கருவங்கத்தைப் புதுச்சட்டியிலிட்டு அடுப்பேற்றி உருக்கி ஒருவாயகன்ற வெண்கலபாத்திரத்தில் எலுமிச்சம்பழச்சாறுபிழிந்துவைத்திருந்து அதில் ஊற்றவேண்டும் இப்படியே யேழுமுறை உருக்கியுருக்கி யூற்றவேண்டும் அதின்பிறகு நல்லெண்ணெயில் இப்படியே ஏழுமுறை உருக்கியூற்றவேண்டும் அதின்பிறகு பசுஞ்சாணிகரைத்துவைத்திருந்து அதில் ஏழுமுறை உருக்கி யூற்றவேண்டும் அதின்பிறகு எருமைக்கோமயத்தில் ஏழுமுறைஉருக்கி யூற்றவேண்டும் அதின்பிறகு கறுப்புக்கொள்ளுபச்சையாய்க்கொண்டுவந்து இடித்துச் சாறுபிழிந்து அதில் ஏழுமுறைஉருக்கி யூற்றவேண்டும் பச்சைக்கொள்ளுகிடைக்காவிட்டால் கொள்ளைநன்றாயிடித்து ஒருநாளெல்லாம் ஊறவைத்து மறுநாளைக்கு அதிகமாகச் சலம்விட்டுக்கஷாயம்

காய்ச்சி அதிலும் ஊற்றலாம் ஆனால் பச்சைக்கொள்ளுச் சாற்றைப் போல் இது சிறந்ததல்ல அதின்பிறகு கள்ளுக்காடி கொண்டு வந்து அதிலும் ஏழுமுறை உருக்கியூற்றவேண்டும் இப்படியெல்லாம உருக்கியூற்றினபின் அந்தவங்கத்தைச் சுத்தஜலம்விட்டு நன்றாய்க்கழுவி வைரசுத்தியாம்.

## 15. பரிபூரணசந்திரோதயசெந்தூரம்.

சரக்குவகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இரசம் | பலம் | 2 | இலிங்கம் | பலம் | ½ |
| மனோசிலை | | ½ | இரசசெந்தூரம் | | ½ |
| தாளகம் | | ½ | பொன்ரேக்கு | | 1 |

செய்முறை.

மேற்படி ஆறுசரக்குகளையும் ஒன்றாய்ச்சேர்த்துக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்துக் கலந்து உறவாகும்படிசெய்து பிறகு எலுமிச்சம்பழச்சாற்றை ஒருபாத்திரத்தில் பிழிந்து அதினிறையைச் செம்பருத்திப்பூவைப்போட்டு ஒருநாளெல்லாம் ஊறவைத்திருந்தால் அந்தப்பூவானது வெளுத்துப்போகும் அந்தப்பக்குவமறிந்து அந்தப்பூவையெல்லாம் எடுத்துப்பிழிந்தெறிந்துவிட்டு மிச்சமாய் நின்ற சாற்றை நன்றாய்வடிகட்டிக்கொண்டு அந்தச்சாற்றால் இருபதுசாமம வரைக்கும் நன்றாயரைத்துப் பிறகு மஞ்சள்கரிசலாங்கண்ணிச் சாற்றால் இருபத்தொருசாமம் வரைக்கும் நன்றாயரைத்து வெயிலில்நன்றாயுலர்த்தவேண்டும் ஆனால் முன்னர் மருந்தை யரைக்கும்போது அரைக்கால்வராகனெடை துருசுகுருபற்பம் போட்டரைக்கவேண்டும் இப்படியாக அரைத்துலர்த்தி யிருக்கின்றமருந்தைக் காசிகுப்பியொன்று கொண்டுவந்து அந்தக்குப்பியைப் நன்றாய்ச்சுத்திசெய்து அதில் பாதியிருக்கும்படி போட்டு அந்தக்குப்பியின் கழுத்துவரைக்கும் உலர்த்தியுலர்த்தி ஏழுசீலைமண்செய்து ஒரு அகன்றசட்டி கொண்டுவந்து அந்தச்சட்டியில் 4-விரற்கடை மணல்கொட்டி அதின்மத்தியில் மேற்படி குப்பியைவைத்து அந்தக்குப்பியின் கழுத்தளவு மறுமடியும் மணல்கொட்டி அடுப்பிலேற்றித் தீபாக்கினியாக எட்டுச்சாமமும், கமலாக்கினியாக எட்டுச்சாமமும், காடாக்கினியாக ஆறுசாமமுமாக எரித்துப் பிறகு அந்தக்குப்பியில் ஏதாவதொரு

கம்பியைப்போட்டுப் பார்க்கவேண்டும் அப்படி பார்க்கும்போது அந் தக்கம்பி கறுப்பாயானால் இதுதான் பக்குவமென்றறிந்து தீயைப்பி டுங்கிவிட்டு ஒருநாளெல்லாம் அடுப்பின்பேரிலேயே ஆறவிட்டு மறு நாள் காலையில் பிரித்துப்பார்த்தெடுத்துக் கல்லத்திலிட்டுப் பொடித் து அத்துடன கைபாகமாகக் கஸ்தூரியும் கோரோசனையுஞ்சேர்த்து ப்புட்டியில்வைத்துக்கொள்ளவேண்டும்.



சாப்பிடும் அளவும், அநுபானமும், தீருநோயும, பத்தியமும்.

அதில ஒருமிவளைக்குப் பணவெடையாக ஒருநாளைக்கிருவேளை யும் தேனிலிழைத்துச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் நெடுநாளாகத் தீராமலிருந்து வருத்தத்தைக் கொடுத்துக் கொண்டுவருகிற சந்நி யும், சத்ததோஷங்களும், சேஷ்மம் தொண்ணூற்றாறும், கீழ்வயிற் றுவலியும் அறுபத்துநான்கு சுரதுகளும, அஷ்டவிதமான காசரோ கங்களும், மேகம் இருபத்தொன்றும், பிரமியங்களும் நீங்கும இதை இப்படியே ஒருவருஷம் வரைக்கும் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் தே கத்தில் சந்திரகாந்திவீசும் பத்தியம் பாலும்சோறும், பசுவினெய், சிறுகீரை, பொன்னாங்காணி, புளியாரை, தேன், சர்க்கரை, மிளகு, சீரகம், தூதுளங்கீரை, பச்சைப்பயறு இவைகளை ஆகும் இதுசாப் பிட்டுக்கொண்டுவரும்போது சந்தனுதிதயித்தால் அப்யங்கனஞ் செ ய்யவேண்டும்.

# பதினைந்தாவது அத்தியாயம்.

## செந்தூரவர்க்கம்.

சம்பூர்ணம்.



தெய்வமே துணை

# வேறு தனி.

## மருந்துமுறிப்பு.

இந்த முறிப்புகளை ஒவ்வொருவருந் தெரிந்துகொண்டிருந்தால் நன்மையென்று நினைத்து நான் இத்தறகாலவயித்தியபோதினியில் வந்திருக்கும் கொடிதாகிய சிலமருந்துகளுக்கும் வராமலிருக்கின்ற சிலமருந்துகளுக்கும் அவைகள் செய்கின்ற கொடுமையை நீக்குதற்கே இந்த முறிப்புகளை இங்கே எழுதிவைத்தேன்.

## வாளத்திற்கு முறிப்பு.

இதைத் தனியாய்த் தின்றுவிடுவதினாலும், மாத்திரைகள், மெழுக்குகள், சூரணங்கள் இவைகளில் சரியாய்ச் சுத்திசெய்யாமல் சேர்த்து அவற்றிலே தேனுமளவைத் தின்பதினாலுமுண்டாகும் அதிகபேதியை நிறுத்தவேண்டியானால் வசம்பு என்னும் கறகமருந்தைச் சட்டியிலிட்டு அடுப்பேற்றி நன்றாய்ச்சுட்டுக் க. வெளுக்கும்படி சாம்பலாக்கி அதில் நல்லெண்ணெய்விட்டுக் கஷாயமாய்க் காய்ச்சிக் குடித்தால் அந்த அதிகரித்தபேதி நின்றுவிடும் கொஞ்சஞ் சாம்பலாகாமல் கரியாயிருந்தாலோ பேதியையதிகப்படுத்திவிடும் இப்படிச் செய்வது ஒன்று இன்னும் அநேகவகையுண்டு.

## அபினிக்கு முறிப்பு:

இதைத் தின்றுவிட்டு அதினால் மயக்கமடைந்திருந்தால் சுக்குக் கஷாயஞ்செய்து கொடுக்கவேண்டும்.

## கஞ்சாவிற்கு முறிப்பு.

இதைத்தின்றுவிட்டு மயக்கத்தையும், நாவறட்சியையும், அடைந்து வருந்துகின்றவர்களுக்கு சுக்குக்கஷாயஞ்செய்து கொடுக்கவேண்டும்.

## இரசத்திற்கு முறிப்பு.

இதைத்தின்று இரத்தவிரத்தமாய்ப் பேதியும் வாய்ப்புண்ணுந் தலையுமடைநதவர்களுக்கு அவிரிவேரைச் கஷாயஞ்செய்து கொடுக்கவேண்டும்.

## வீரத்திற்கு முறிப்பு.

இதைத்தின்று வாந்தியும், பேதியும், ஆகப்பெற்றோர்க்குத் தென்னங்கள் கொடுக்கலாம அல்லாமல் நெய்ச்சிட்டியிலைச் சாறுங் கொடுக்கலாம்.

## பூரத்திற்கு முறிப்பு.

இதைத்தின்று வாய்பிடிக்கப்பட்டவர்களுக்கு பாகலிலைச்சாறு கொடுக்கவேண்டும்.

## தாளகத்திற்கு முறிப்பு.

இதைத்தின்று வருந்துகிற தவளைசசொறிபோலுஞ் சொறியால்வருத்தப்படுவோர்களுக்கு நீலிவேர், ஆவாரம்பூ, வெட்டிவேர், சீரகம், மாதுளம்விரை, தேங்காய்க்குரும்பை, காசினிவோ இவைகளைக் கஷாயஞ்செய்து கொடுக்கவேண்டும்.

## கந்தகத்திற்கு முறிப்பு.

இதைத்தின்று வருந்துகிறவர்களுக்கு ஆவிரம்வேர், வேளைவேர், அவிரிவேர், [illegible], [illegible]தியிலை, சிறுநாகப்பூ இவைகளைக் கஷாயஞ்செய்து கொடுக்கவேண்டும்.

# தற்கால வயித்தியபோதினி.

முற்றிற்று.



